


# یا امام حسین رضی اللہ عنہ

اے دل منا بگیر سلطانِ اولیا!

یعنی حسین ابنِ علی جانِ اولیا!

حضرت ادریس ابنِ شیرِ رضا

தொகுப்பு ஆசிரியர் :

S.அப்துல் லத்தீஃப் முஜத்ததி நக்ஷ்பந்தி

# பொருளடக்கம்

## நூல் விபரம்

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | ஒரு மாவீரரின் சத்தியப் போராட்டம்<br>– கர்பலா – |
| மொழி | : | தமிழ் |
| தொகுப்பாசிரியர் | : | S.அப்துல் லத்தீஃப் முஜத்ததி<br>நக்ஷ்பந்தி |
| நூலின் உரிமை | : | வெளியீட்டாளருக்கே |
| வெளியீடு | : | **SAHEB DARGAH PUBLISHERS**<br>74/176-A,1st Floor,<br>Ghandiji Road,<br>Opp.Erattai Mastan Dargah,<br>Thanjavur - 613001<br>E-Mail : editor@sahebdargah.org<br>website : www.sahebdargah.org |
| பதிப்பு ஆண்டு | : | முதற் பதிப்பு :<br>முஹர்ரம் – ஹிஜ்ரி 1432<br>டிசம்பர் – 2010 |
| அச்சிட்டோர் | : | மாணிக்கம் பிரிண்டர்ஸ் ,<br>999, தென்கீழ் அலங்கம்,<br>தஞ்சாவூர் – 613001<br>போன் : 04362 - 237953 |
| விலை | : | ரூ 40/- |

# பொருளடக்கம்

## பொருளடக்கம்

# மதிப்புரை...!

இஸ்லாமிய வரலாற்றில் முக்கியமான புனித இடமாக கர்பலா களம் பார்க்கப்படுகிறது. ஒவ்வொரு நபியின் உம்மத்திலும் திருப்புமுனையான சம்பவங்கள் உண்டு. நமது நபிகள் கோமான் ரஸூலே கரீமின் உம்மத்தில் முதன்மைக்குரிய சம்பவமாக கருதப்படுவது கர்பலாவில் நடந்த கொடிய நிகழ்வாகும். இதுபோன்று புனிதத் தியாகமும், மேன்மையும், துயரமும் கொண்ட ஓர் சம்பவம் இதுவரை உலகில் நடந்ததுமில்லை. இனி நடக்கப் போவதுமில்லை. இதை இஸ்லாமியர்கள் மட்டுமல்ல உலகின் அனைத்து வரலாற்று ஆசிரியர்களும், கர்பலாவில் நடந்த அதிஅற்புத வீரதீரமிக்க யுத்தத்தை இதுகாறும் எங்கும் எதிலும், எப்போதும் கண்டதில்லை என்றே எழுதுகிறார்கள்.

“கர்ப்” என்றால் கஷ்டம். “பலா” என்றால் என்றால் தொல்லை, கஷ்டம். கஷ்டங்களும், தொல்லைகளும் நிறைந்த ஓரிடத்தில் 72பேர். அத்தனை பேரும் ஒரு குடும்பத்தின் அங்கமாக நபிகள் கோமான் திருப்பரம்பரையின் சந்ததி கிளையார்கள், ரஸூலுல்லாஹ்வின் மூன்றாம் தலைமுறை, ரஸூலைக் கண்ட வம்சாவழிப் புனிதர்கள், ஈ எறும்புக்குக் கூட தீங்கு நினைக்காத நெஞ்சில் ஈரமுள்ளவர்கள். சண்டாளன் எஜீதின் முனாஃபிக் தனமான முடியாட்சி அதிகாரத்தை ஏற்றுக்கொள்ள நிர்பந்திக்கப்பட்ட போது அதற்கு இஸ்லாத்தில் இடமில்லை என்று இதமாக எடுத்துக் கூறியதற்காக வயாதானவர்கள், வியாதியஸ்தர்கள், பெண்கள், பச்சிளம் குழந்தைகள் என்று கூட பாராது யுத்தகளத்திலேயே பாட்டனார் பெயரில் கலிமா ஓதி, பாங்கு சொல்லி, தொழுதுகொண்டிருந்த 22 எஜீதிய படை வீரர்கள் ஒன்று சேர்ந்து தன் கண்முன்பே துடிதுடிக்க குருதி கொட்டகொட்ட ஷஹீது ஆக்கப்படுவதை கண்டு அஞ்சாது துஞ்சாது...

யா! அல்லாஹ்!! எனது பாட்டனார் உனது உன்னத ரஸூலின் இஸ்லாமிய உம்மத்திற்காக... தீனுல் இஸ்லாத்தை நிலைநாட்ட இன்னும் தியாகம் தேவை என்றால் இதோ நான் தயார் என்று தானும் ஷஹீதாகி இன்னுயிர் ஈந்து இஸ்லாத்தை நிலைபெறச் செய்த அதிஅற்புதமாக, புரட்சிகளுக்கெல்லாம் மூலமாய், தியாங்களுக்கெல்லாம் தலைமையாய் அரேபிய பாலைவனத்தில் நடந்த ஓர் ஷஹாதத்து சம்பவம்.

# பொருளடக்கம்



அதுபோது நடந்த போரில் தற்காப்புக்காக கூடாரத்தை சுற்றி அகழி தோண்டப்பட்டு நெருப்பு மூட்டப்பட்ட "தீ" இன்று அலாவா என்பதாய்... "யா அல்லாஹ்! நல்லதை நாடி வருவோருக்கு இந்த தீ நபி இப்ராஹீமுக்கு சோலைவனமாய் மாறியதைப் போல் மாற்றிவிடு" என்ற இமாம் அவர்களது துஆ நினைவாக நெருப்பை பூவாக கருதி "நெருப்புக் குழி"....

இமாம் ஹுஸைனாரின் புனித சிரசு குருவாளில் ஏந்தி கூஃபாவின் கர்பலா களத்திலிருந்து ஷாம் தேசத்து சண்டாளன் யஜீதின் ஆணவ அரசியல் அவையில் கொண்டு சென்ற அடையாளமாய் இமாம் ஹுஸைன் "பஞ்சா"...

கரம் கேட்ட ஆட்சிக்கு சிரம் தந்த வள்ளலாக வீரதீரமிக்க தியாகத்தின் நினைவாக அஸதுல்லாஹ் அலீ அல்லாஹ்வின் புலி என வேடமிட்டு மாற்று மதத்தாரும் மத நல்லிணக்கமாய் அல்லாஹ் பண்டிகை எனக் கொண்டாடப்படும் முஹர்ரம் மாதம் பத்தாவது நாள் ஆஷுராதான் "ஆஷுர்கானா"...

ஆஷுரா முஹர்ரம் பத்தாவது நாள் நடைபெறும் ஆஷுர்கானாவில் பஞ்சா, கிச்சடா, சோங்கே, ஷீர்னி, ஷர்பத், பாத்திஹா செய்து நடத்திவந்த பாரம்பரிய மதங்களின் சங்கமத்தை விளக்கும் ஓர் நூலை தமிழில் இல்லாத குறையை போக்க இந்த வரலாற்று தொகுப்பு நூல் வெளிவந்துள்ளது மிகமிக பாராட்டத்தக்கது.

வஹ்ஹாபிய விஷமிகளான தேவ்பந்திய தப்லீகர்கள் இன்று கர்பலா களத்தை அரசியல் சண்டை என்று இட்டுக்கட்டி இல்லாது பொல்லாததுகளை எழுதி மக்களை குழப்பும் போது இந்நூல் பொய்யர்களின் முகத்திரையை கிழித்து சண்டாளன் யஜீதின் அடிவருடிகள் இவர்கள்! முஸ்லிம்களே...! முஃமின்களே...! தேவ்பந்தி வஹ்ஹாபிகளையும், தப்லீக் வேஷதாரிகளையும் இவர்களுக்கு வக்காலத்து வாங்கும் நவீன தரீகாவாதிகளையும், விட்டு ஒதுங்கி சரியான சரித்திர புனித நிகழ்வான முஹர்ரம் மாதத்தின் ஈமான் தியாகத்தை ஷரீஅத்திற்கு உட்பட்டு வீடுதோறும், வீதிதோறும், நபிகள் கோமானின் கிளையார்களான அஹ்லே பைத்து சாதாத்மார்களின் நேர்மையை நெஞ்சில் ஏந்தி போற்றி மதித்து இம்மையிலும், மறுமையிலும் ஈடேற்றம் பெறுங்கள்...

ஏனெனில், ஒவ்வொரு கர்பலாவுக்குப்பின் மீண்டும்

இஸ்லாம் ஜீவித்தெழுகிறது என்று ஓர் உருது கவிஞர் இப்படி கூறுகிறார்...

قتلِ حسین اصل میں مرگِ یزید ہے
اسلام زندہ ہوتا ہے ہر کربلا کے بعد

**இமாம் ஹுஸைன் அவர்களின் வீர தியாகம் யஜுதுக்கு மரணஅடி... ஒவ்வொரு கர்பலாவுக்குப்பின் மீண்டும் இஸ்லாம் ஜீவித்தெழுகிறது...**

மதிப்புரை எழுதும் தகுதி எமக்கு இல்லை என்ற போதிலும், அஹ்லே பைத்துக்கள் மீது கண்ணியம் கொண்ட தொகுப்பாசிரியரின் வேண்டுகோளை ஏற்று ஒரு சில வரிகளை சமர்பித்துள்ளேன். அதில் உள்ள குறைகளுக்கு மன்னிப்பு வேண்டியும், இந்நூலை வாங்கி மற்ற நூல்களை படிப்பது போலல்லாமல் அதன் புனிதம் கருதி மரியாதையோடு படித்து பாதுகாத்து பயன்பெறும்படி தாழ்மையுடன் விண்ணப்பித்துக் கொள்கிறேன்..

*யா அலீ தூலா...! ஹஸன்...!! ஹுஸைன்...!!!*

இங்ஙனம்,
என்றும் பணிவுடன்,
தாழ்மையுள்ள,
சையத் வஜீஹுன்னகி சக்காப்,
தஞ்சை.

# வாழ்த்துரை…!

அன்புடையீர்…!

அஸ்ஸலாமு அலைக்கும் வ ரஹமத்துல்லாஹி பரகாதுஹு…

அண்ணல் நபி ஸல்லல் லாஹு அலைஹி வ ஸல்லம் அவர்களின் அன்பு பேரர் இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு அவர்களின் தியாக வாழ்க்கை வரலாற்றை தெரிந்து கொள்ள வேண்டும் என்பது எனது நீண்ட நாள் ஆசை! அந்த தியாகச் சுடரின் வரலாறு முழுமையாக உள்ள எந்த புத்தகமும் என் கண்ணில் படவே இல்லை! எல்லாம் வல்ல அல்லாஹு சுப்ஹானஹு தஆலா என்னுடைய அந்த ஆவலை அன்பு சகோதரர் ஆலி ஜனாப் S.அப்துல் லத்தீஃப் முஜத்ததி அவர்களின் சீரிய முயற்சியால் வெளிவந்துள்ள **ஒரு மாவீரரின் சத்தியப் போராட்டம் – கர்பலா** என்னும் இந்நூலை படிக்கும் வாய்ப்பை கொடுத்ததன் மூலம் நிறைவேற்றியுள்ளான்!

புகழும், நன்றிகளும் அந்த ஏக இறைவனுக்கே உரித்தாகுக! அல்ஹம்து லில்லாஹ்!

ஹஜ்ரத் இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு அவர்களின் தியாக வாழ்க்கையை உணர்வுப் பூர்வமாக விவரிக்கும் தொகுப்பாசிரியர் அவர்கள் அதற்கு முத்தாய்ப்பாக ஐம்பெரும் கலீஃபாக்களின் சத்திய வாழ்க்கையும் முன்னோட்டமாக சேர்த்திருப்பது இந்நூலுக்கு மேலும் ஒரு மகுடம்!

சத்திய இஸ்லாத்தை அழிக்கவும், நபி ஸல்லல் லாஹு அலைஹி வ ஸல்லம் அவர்களின் குடும்பத்தினரின் மீது வெறுப்புணர்வை தூண்டவும், நயவஞ்சகர்கள், முனாஃபிக்குகள், மார்க்க துரோகிகள், யஹூதிகள், நஸராணிகள், வஹ்ஹாபிகள் போன்றோரின் கூட்டு சதிகள், அதற்காக அவர்கள் செய்த அக்கிரமங்கள், ஆகியவற்றை இந்நூல் மிகவும் தெளிவாக விவரிக்கின்றது.

“தீங்கு விளைவிக்க போகிறவனுக்கு துணை போகிறவன் கூட தீங்கு விளைவிப்பவனே!” என்ற தன் பாட்டனார் நபி ஸல்லல் லாஹு அலைஹி வ ஸல்லம் அவர்களின் சொல்படி “வழி

தவறியவர்களுக்கு துணை போகாமல் மக்களுக்கு நேர்வழி காட்டுகின்ற கடமையிலிருந்து சற்றும் பின் வாங்க மாட்டேன்” என்று சூளுரைத்து கொடியவன் யஜீதுக்கு கலீஃபாவாக பைஅத் (சத்தியபிரமாணம்) செய்து கொடுக்க மறுத்த இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு அவர்களின் சத்தியப் போராட்டம் இக்காலத்து முஸ்லிம்களாகிய நமக்கெல்லாம் ஒரு படிப்பினையாகும்.

நமது ஈருலக இரட்சகர் அண்ணலம் பெருமானார் ஸல்லல் லாஹு அலைஹி வ ஸல்லம் அவர்களின் ஒரு பாவமும் அறியாத வழித்தோன்றல்கள் புனித மதீனா நகரை துறந்து புனித மக்கா நகரம் செல்வதை வானத்தை காலி செய்து விட்டு செல்லும் நட்சத்திர கூட்டம் என குறிப்பிட்டுள்ள வரிகளை படிக்கும் போது நம்மையறியாமலேயே நம் இதயம் இரத்தக் கண்ணீர் வடிப்பதை உணர்கிறோம்.

கூஃபா நகர் மக்களின் துரோகத்தையும், அவர்கள் கொடியவன் யஜீதுடன் அற்பமான இவ்வுலக இன்பங்களுக்காக கைகோர்த்து செய்த அக்கிரமங்களையும் நினைத்தாலே மனம் குமுறுகிறது.

இமாம் அவர்கள் “அல்லாஹ்வின் நாட்டம் எதுவாயினும் அதை பொறுமையுடன் ஏற்றுக் கொள்வோம்” என்று தன் குடும்பத்தினருக்கு தைரியம் கூறி கடைசி வரை பொறுமையைக் கொண்டே அல்லாஹ்விடம் முறையிட்டுள்ளார்கள். அஹ்லு பைத்துகள் மீது அநியாயமாக போர் தொடுத்து தன் கைகளை இரத்தக் கறை ஆக்குவதின் மூலமாக எதிரிக் கூட்டத்தினருக்கு நாளை மறுமையில் சர்வ வல்லமையுடைய அல்லாஹ்விடத்தில் கிடைக்கப் போகும் தண்டனைக்காக இமாம் ஹுஸைன் அவர்கள் அடைந்த கவலை நம்மையெல்லாம் வியப்பில் ஆழ்த்துகிறது.

போர் களத்தில் எதிரிகளிடம் கூட பரிவுடன் தன்னிடம் இருந்த தண்ணீரைக் கொடுத்து உதவி, மனித நேயம் என்றால் என்ன என்பதையும், எதிரிகளிடம் கூட கருணை காட்டும் மார்க்கம் தான் “இஸ்லாம்” என்பதையும் அன்றே இமாம் அவர்கள் காட்டிச் சென்றுள்ளார்கள்.

கடும் பசி, கொடுமையான தாகம், சுட்டெரிக்கும் வெயில் ஆகியவற்றை தாங்கிக் கொண்டு மிக சொற்ப எண்ணிக்கையுள்ள வீரர்களுடன் மிகப்பெரும் கொடும் படையை எதிர்த்து

# பொருளடக்கம்



சத்தியத்திற்காக போராடிய அந்த மாவீரரின் வீர வரலாற்றை ஒவ்வொரு முஸ்லிமும் அறிந்து கொள்வது கடமையாகும்.

தாகத்தால் தவித்த பச்சிளங் குழந்தையின் தொண்டையில் வில் ஏய்து கொடூரமாக கொலை செய்த அந்த ஈவிரக்கமற்ற இஸ்லாமிய எதிரிகள் தம்மை சூழ்ந்து இருப்பதை நன்கு உணர்ந்திருந்தும், இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு அவர்கள் தொழுகையின் நேரம் கடந்து கொண்டிருக்கிறது... நம் தொழுகை களாவாகி விடக்கூடாது என்ற ஒரே காரணத்திற்காக தொழுகையில் ஸுஜூதில் தலை வைத்து வல்ல அல்லாஹ்வை நினைத்திருக்கும் போது கோழைகளால் பின்புறமாக கழுத்து வெட்டப்பட்டு ஷஹீதானார்கள் என்ற வரலாற்றை படிக்கும் போது நம் இதயம் சுக்கு நூராக வெடிப்பது போன்ற உணர்வு ஏற்படுகிறது.

தொழுகையின் மேன்மையை இதனைவிட யார்தான் நமக்கு சிறப்பாக எடுத்துக் காட்டி விட முடியும்?

வல்ல நாயன் இந்நூலைப் படிக்கின்ற ஒவ்வொரு முஸ்லிமுக்கும் இமாம் ஹுஸைன் அவர்கள் காட்டிச் சென்றுள்ள தூய இஸ்லாத்தின் வழி நடந்திடவும், கண்மணி நாயகத்தின் குலக்கொழுந்துகளான அஹ்லு பைத்துகள் என்னும் அவர்களின் குடும்பத்தினரை நேசித்து வாழ்ந்திடவும், நாளை மறுமை நாளில் அவர்களோடு நிற்கும் பாக்கியத்தையும் அருள் புரிவானாக!

ஆமீன்!! யாரப்பல் ஆலமீன்!!!

இப்படிக்கு,

டாக்டர் S.சையத் ஷப்பீர் அஹமத்,

MBBS., DLO., DNB., (ENT) MNAMS - திருச்சி.

# என்னுரை...!

அஸ்ஸலாமு அலைக்கும் வ ரஹமத்துல்லாஹி பரகாதுஹு,

"அல்லாஹ் உங்களுக்கு மிகச் சிறந்தவற்றையே கொடுத்துள்ளான். எவன், உங்களைப் பார்த்து வாரிசு இல்லாதவர் என கூறினானோ, உண்மையில் அவனே வாரிசு இல்லாதவன் (அப்தர்), நீங்களே வாரிசு உடையவர்" என்னும் பொருள்பட "இன்னா ஆதைனா கல் கவுசர், ஃப ஸல்லி ரப்பிக வன்ஹர், வ இன்ன ஷானி அக ஹுவல் அப்தர்" என்ற இறைவசனத்தை திருக்குர்ஆனிலே இறக்கி, நபியின் வாரிசானவரை உயர்வுப்படுத்தி விட்டான் அல்லாஹுதஆலா! (ஆதாரம் :- தஃப்ஸீரே நயீமி) இதற்கு மேலும் ஆதாரமாக நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் தமது பொன்மொழியான ஹதீஸ் ஷரீஃப்பில் "அல் ஹுஸைனு மன்னீ வ அனா மினல் ஹுஸைன் - ஹுஸைன் என்னைக் கொண்டும், நான் ஹுஸைனைக் கொண்டும் உள்ளேன்" எனக் கூறுகிறார்கள். அதாவது இமாம் ஹுஸைனை (ரஜியல்லாஹு அன்ஹு) தன்னைப் போலவே அல்லாஹ்வின் மிகச் சிறந்த - உயர்ந்த விருப்பத்துக்காகவே வாழ்பவர் என்றும், மேலும் தன்னுடைய வாரிசு என்பதையும் உணர்த்தி விட்டார்கள்.

மேலும் இதனை உறுதிப்படுத்துவதற்கு, குத்புல் ஹிந்த், ஹஜ்ரத் காஜா கரீபுன் நவாஸ் முயினுத்தீன் சிஸ்தி அஜ்மீரி ரஜியல்லாஹு அன்ஹு அவர்கள் இமாமைப் பற்றி குறிப்பிடுகையில் "ஹக்கா கே பினாயே லா இலாஹ் ஹஸ்த் ஹுஸைன்" உண்மையில் ஏகத்துவத்தை நிலைநாட்டியவரே இமாம் ஹுஸைன் தான்! (ரஜியல்லாஹு அன்ஹு) எனக் கூறுகிறார்.

இவ்வாறு அல்லாஹ், ரஸுலல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம், ஹஜ்ரத் காஜா கரீப் நவாஸ் ரஜியல்லாஹு அன்ஹு என அனைவரும் போற்றிய - பெருமைமிக்க இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹுவை, என் வாழ்நாள் முழுவதிலும் நினைத்து வாழுமாறு! என்னை பழக்கிய, மதிப்பிற்கும் பாசத்திற்குமுரிய என் பெற்றோர்களான பஞ்சா பர்தார் என அழைக்கப்படும் ஷேக் மஜார் முஜத்ததி - மொய்தீன் பீ முஜத்ததி அவர்களுக்கு இப்புத்தகத்தை சமர்ப்பணம் செய்கிறேன். மேலும் எனக்குள் இப்புத்தகம் எழுதும் ஆர்வத்தை தூண்டிய ஹஜ்ரத்

ஹாஃபிசுல் குர்ஆன், அப்துர் ரஹ்மான் கலீம் ஹஜார்வி ரஹ்மத்துல்லாஹி அலைஹி சூரியூர் - (திருச்சி) அவர்களுக்கும், எனது ஆன்மீக குருவான அல்ஹாஜ் காரி முஹம்மத் ராஷித்-ராம்பூரி முஜத்ததி கிப்லா அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

"ஒரு மாவீரரின் சத்தியப் போராட்டம்" என்ற இப்புத்தகத்தில் இமாம் ஹுஸைனாரின் (ரஜியல்லாஹு அன்ஹு) அவர்களின் தியாக சம்பவத்தை விவரித்துள்ளேன். இவ்வரலாற்றைப் பற்றி முழுமையாக தெரிந்து கொள்வதற்கு ஏதுவாக 5 கலீஃபாக்களைப் பற்றியும் சுருக்கமாக கூறி, அதில் கிலாஃபத் என்றால் என்ன? கிலாஃபத் செய்ய தகுதியுடையவர்கள் யார்? தகுதியில்லாதவர்கள் யார்? மக்களின் மனநிலை! நயவஞ்சகர்களின் நிலை! அன்று முதல் இன்று வரை! போன்ற வரலாற்று சம்பவங்களை குறிப்பிட்டுள்ளேன்.

வாசகர்களாகிய நீங்கள், இப்புத்தக தொகுப்பை படித்து பயன்பெற்று, வஹாபிகளிடமிருந்து விலகி நில்லுமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறேன்! மேலும் இப்புத்தகத்தில் ஏதேனும் பிழைகள் ஏற்பட்டிருப்பின் அதற்கு முழுக்காரணம் நானாவேன். எனவே இச்சிறியோனின் சிறிய முயற்சியில் ஏற்பட்டிருக்கும் பிழைகளை மன்னித்து, அல்லாஹ், ரஸுலிடம் துவா செய்யுமாறு தாழ்மையுடன் கேட்டுக் கொள்கிறேன்.

اے دل منا بگیر سلطانِ اولیاء

یعنی حسین ابن علی جانِ اولیاء (حضرت ادریس ابن شیر رضا)

**அய் தில் மனா பகீர் சுல்தானே அவுலியா!**
**யானி ஹுஸைன் இப்னு அலி ஜானே அவுலியா!**
**- ஹஜ்ரத் இத்ரீஸ் இப்னு ஷேர் ரஜா கான்**

(ஏய் மனமே, இறைநேசர்களின் மாமன்னரை பிடித்துக் கொள்! ஏனெனில், அலியுடைய மகன் ஹுஸைன்தான் இறைநேசர்களின் (வலிமார்களின்) உயிராக இருக்கிறார்!)

இப்படிக்கு,
S. அப்துல் லத்தீஃப் முஜத்ததி நக்ஷ்பந்தி.

## ரஸூலல்லாஹ்வின் (ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்) முன்னறிவிப்புகளும் -சந்தர்ப்பவாத எதிரிகளும்

ஈருலகத்தின் நாயகர், மனித குலத்தின் மாண்பாளர், அல்லாஹ்வின் ஹபீபும் (பிரியமானவருமான) கண்மணியுமான ஜனாபே முஹம்மதுர் ரஸூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வ ஸல்லம் அவர்கள் தமது கடமையாக்கப்பட்ட ஹஜ்ஜை ஹிஜ்ரி 10ம் ஆண்டு நிறைவு செய்தார்கள். அப்பொழுது திருமறையில் வஹீயாக "அல் யவ்ம அக்மல்து லக்கும் தீனக்கும் வ அத்மம்து அலைக்கும் நீஅமதி வ ரஜீ(Z)து லகுமுல் இஸ்லாம தீனா" என்ற வசனம் இறங்கியது. இதனுடைய அர்த்தம் இன்றைய தினம் உங்களுக்கு உங்களுடைய மார்க்கத்தை பரிபூரணமாக்கி வைத்து விட்டேன். என் அருட்கொடைகளை உங்கள் மீது நிரப்பமாக்கி வைத்து இஸ்லாத்தையும் உங்களுக்குரிய மார்க்கமாகப் பொருந்திக் கொண்டேன். **( திருக்குர்ஆன் 5:3)**

லா இலாஹா இல்லல் லாஹு முஹம்மதுர் ரசூலுல்லாஹு (வணக்கத்திற்குரியவன் இறைவனை தவிர வேறொன்றும் இல்லை, முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்கள் அல்லாஹ்வின் திருத்தூதராக இருக்கிறார்கள்.) என்னும் ஏகத்துவத்தின் தத்துவத்தை விளக்கி, சத்தியத்தை நிலைநாட்டிட 1,24,000 நபிமார்கள் வந்து சென்ற போதிலும், முதல் நபியாகவும் (நூராகவும்) இறுதி நபியுமாய் (நூரின் வடிவமாகவும்) வந்த முஹம்மத் முஸ்தஃபா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களைக் கொண்டே, இஸ்லாம் எனும் ஏக இறைவனின் மார்க்கத்தை பரிபூரணம் செய்தான் அல்லாஹுதஆலா.

ஏகத்துவத்தின் மந்திரமான கலிமா தைய்யபாவிற்கு சூஃபியாக்கள் தரும் விளக்கமான, அல்லாஹ்வை தவிர வேறொன்றுமே இல்லை - அவனது படைப்புகளில் படைத்தவனை (அல்லாஹ்வை) பாருங்கள் என்னும் வஹ்தத்துல் உஜூத் என்ற வித்தகக் கலையை மனிதர்களுக்கு போதித்து மனிதர்களை புனிதர்களாக மாற்றும் மெய்ஞானத்தை அளிப்பவராய், மா மறை எனும் திருக்குர்ஆனை வஹியின் மூலமாக தம்முடைய புனித வாயினால் உலகிற்கு அறிமுகப்படுத்தியவராய், பாமரர்களுக்கு

பகுத்தறிவை ஏற்படுத்தியவராய், மூட நம்பிக்கைகளை களைத்தவராய், மனித நேயத்தை தழைத்திட செய்தவராய் விளங்கியவர்கள் ரசூலே கரீம் முஹம்மத் முஸ்தஃபா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்!

தாம் பிறந்த அதே தேதி, அதே கிழமையான ரபீயுல் அவ்வல் பிறை 12- திங்கட்கிழமையான ஹிஜ்ரி 11ம் ஆண்டு உலகத்தின் இயற்கை நியதியை நடைமுறைப் படுத்துவதற்காக வேண்டி, அஸ்ஸலாமு அலைக்க யா ரஸுலல்லாஹ்!! யா ஹபீபல்லாஹ்!! என்ற வாழ்த்துகளை தன் அடியார்களிடமிருந்து கேட்டுக்கொண்டும், பதிலும் அளித்துக்கொண்டும் தம்முடைய பொன்னிறக் கூண்டில் (ரவ்லா ஷரீஃப்) ஓய்வெடுத்தவராகவும், நூராக(ஒளிமயமாய்) எங்கும் இருப்பவராய், உலகத்தின் அன்றாட வாழ்க்கையிலிருந்து மறைந்து வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள்.

உலக வாழ்க்கையே நிலையான வாழ்க்கை என எண்ணம் கொண்ட காபிர்களான, ஷைத்தானிற்கு துணைபோகக் கூடிய நஸ்ராணிகளுக்கும், யஹுதிகளுக்கும், உலக ஆதாயங்களை அதிகமாக விரும்பிய அற்பர்களுக்கும், நயவஞ்சகர்களுக்கும் ரஸுலல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் உலக மறைவு புத்துணர்ச்சியை ஊட்டியது! இஸ்லாத்தின் வளர்ச்சியினால் ஒடுக்கப்பட்ட இந்த கொடூரர்கள் ஆட்சியையும், செல்வத்தையும் இழந்து நின்று கொண்டே இஸ்லாத்தை அழிக்கவும் அதனுடைய வளர்ச்சியினை தடுக்கவும், தமது திட்டங்களையும் செயல்களையும் அமல்படுத்தினர்!

## இதயத்தில் இஷ்க் என்னும் ஜோதி...

இஸ்லாத்தின் மீது காழ்ப்புணர்ச்சி கொண்ட சுயநலவாதிகள் தாங்கள் இழந்து போன பாரம்பரியத்தை மீட்க சிலுவைப்போர்கள் என்ற பெயரில் இஸ்லாமியர்கள் மீது படையெடுத்து அழிக்க நினைத்தும் அவர்களால் முடியாது தோற்றுப்போயினர். தம் பக்கம் மிக அதிகமாக படைபலங்கள் இருந்த போதிலும் சிறிய படையினரான இஸ்லாமியர்களிடம் தோற்றுப்போவது வாடிக்கையாகி விட்டது! காரணங்கள் தெரிந்துக் கொள்ள முற்பட்ட போது, இஸ்லாமிய வீரர்கள் ஒவ்வொருவரும் தங்களுடைய இதயத்தில் இஷ்க்கே ரஸுல் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் என்னும் முஹப்பத்தை (காதலை) ஏற்றியிருந்தார்கள். அதன் காரணமாக படைக்கலத்தில் இஸ்லாமிய வீரர்களிடையே ஓர் அபரிதமான ஆன்மீக சக்தி வெளிப்பட்டு எதிரிகளை கலங்கோடச் செய்தது.

## இஸ்லாம் கூறுபோடப்பட்டது...

இனி இஸ்லாமியர்களை வீரத்தால் வீழ்த்திட முடியாது என்பதை நன்குணர்ந்த கயவர்கள், ஷைத்தானின் குதர்க்க அறிவோடு தங்களது பாரம்பரிய சதிச்செயலான Divide & Rule Policy (பிரித்து - ஆளும்) திட்டத்தை ஏற்படுத்தினர். அதாவது வைரத்தை வைரத்தால் வெட்டுவது போல, இஸ்லாத்தை அழிக்க இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டவர்களையே வைத்து அழிக்க முடிவு செய்யப்பட்டு இதற்கென ஒரு குழுவும் அமைக்கப்பட்டது!

அக்குழுவின் உறுப்பினர்களே இஸ்லாத்தை ஏற்றவர்கள் போல நடித்து இஸ்லாமியர்களை ஏமாற்றவும், குழப்பங்களை முஸ்லிம்களிடையே ஏற்படுத்தவும் முனைந்து விட்டது. இவர்களுக்கு துணையாக ஜிஸ்யா வரியை ஏமாற்றுவதற்காக இஸ்லாமிய வேடம் தரித்த யஹூதிகளும், நஸ்ராணிகளும் கடமைக்கு இஸ்லாத்தை ஏற்று உலக இச்சையில் (மண்ணாசை, பொன்னாசை, பெண்ணாசை, மது) போன்றவற்றில் மனம் கழித்து கொண்டிருந்த பாவிகளும் சேர்ந்துக் கொண்டனர்.

இவர்களனைவரும் நோன்பு, தொழுகை, ஹஜ், குர்ஆன் ஓதுதல் - மனனம் செய்தல், தர்ஜுமா கூறுதல், சொந்த வியாக்கியானம் செய்தல், உலமாக்களை விலைக்கு வாங்குதல், இறைநேசர்களை அவமதித்தல், மீலாது, மௌலீது, பாத்திஹா போன்றவற்றை தடுத்தல் என்ற பலச் செயல்கள் மூலம் இஸ்லாத்திற்கு அடிப்படை ஈமானான இஷ்க்கே ரஸூல் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமின் முஹப்பத் என்னும் காதலையும், உள்ளப்பூர்வமான மரியாதையையும் கெடுத்து முஸ்லிம்களிடையே ஈமானை தடுமாறச் செய்துவிட்டு, இஸ்லாமிய மார்க்கத்தையே வீழ்த்தி விட அன்று முதல் இன்று வரை துரிதமாக செயல்பட்டு சிறு சிறு வெற்றிகளையும் கண்டு வருகின்றார்கள் இந்தக் கயவர்கள்! (இவர்களின் இறுதி வெற்றி நரகத்திலேயே!!!)

இஸ்லாம் பரிபூரணமாக்கப்பட்ட பின்பும், எதிர் காலங்களில் வரும் குழப்பங்கள், சோதனைகள், சதிகாரர்களின் சூழ்ச்சி போன்றவற்றிலிருந்து இஸ்லாமியர்களை பாதுகாக்க நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் பல்வேறு முன்னறிவிப்புகளை, பல இடங்களில் பல சந்தர்ப்பங்களில் மக்களிடையே பல முறை செய்துள்ளார்கள். அவற்றுள் சிலவற்றை இங்கே பார்ப்போம்...

**“என்னுடைய மறைவிற்கு பின் கிலாஃபத் என்னும் நேரிய ஆட்சி 30 ஆண்டுகள் மட்டுமே தொடரும்”**

“எனது உம்மத்தினர்கள் 73 கூட்டங்களாக பிரிவார்கள், ஒரே ஒரு கூட்டத்தை தவிர, மற்ற அனைத்து 72 கூட்டத்தினரும் நரகை சென்றடைவார்கள். என் வழிமுறைகளையும், சஹாபாக்களின் வழிமுறைகளையும் பின்பற்றியவர்கள் மட்டுமே சொர்க்கத்தை சென்றடைவார்கள்.”

## ஹஜ்ரத் இமாம் அலீயாரின் மேன்மைகள்...

**அந்த மின்னி பி மன்ஜிலதி ஹாரூன மிம் மூஸா இல்லா அன்னஹு லா நபிய்ய ப( B)அதி -**

“நபித்துவம் எனக்குப் பின் தொடரப்படாத ஒன்றையன்றி நபி மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களிடம் நபி ஹாரூன் அலைஹிஸ்ஸலாம் அவர்களிருந்த படித்தரத்தில் நான் உம்மை விட்டுச் செல்கிறேன்; என்று அலீ கர்ரமல்லாஹு வஜ்ஜஹு அவர்களிடம் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் அறிவித்தார்கள்.”

**அல்லாஹும்ம மன் குன்த மவ்லாஹு ஃப அலீய்யுன் மவ்லாஹு அல்லாஹும்ம வாலி மன் வாலா ஹு வ ஆதி மன் ஆதாஹு வன்சுர் மன் நஸரஹு வக் ஜுல் மன் கஜ்லஹு வ அத்ராரல் ஹக்க ஹைசு தார**

இறைவா! எவருக்கு நான் நேசனோ அலீயும் அவருக்கு நேசரேயாவார். அவரை நேசித்தவரை நீயும் நேசிப்பாயாக, அவரை பகைத்தவரை நீயும் பகைப்பாயாக. அவருக்கு துணைபுரிந்தவருக்கு நீயும் துணைபுரிவாயாக. அவரைப் புறக்கணித்தவரை நீயும் புறக்கணிப்பாயாக. அவரின் புறம் சத்தியத்தை நிலைப்படுத்துவாயாக; என நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள், அலீ ரஜியல்லாஹு அன்ஹு அவர்களின் கையை பிடித்து உயர்த்தியவர்களாக அல்லாஹுதஆலாவிடம் இறைஞ்சினார்கள்.”

“ஹஜ்ரத் ஆதம் நபியின் அறிவையும், ஹஜ்ரத் நூஹ் நபியின் இறையச்சத்தையும், ஹஜ்ரத் இபுராஹீம் நபியின் இறைநேசத்தையும் ஹஜ்ரத் மூஸா நபியின் அச்சத்தையும், ஹஜ்ரத் ஈஸா நபியின் இறை வணக்கத்தையும் காண விரும்புவோர் அபூதாலிபின் மகன் அலீயை பார்க்கவும்.”

"அலீ கஅபா போன்றவர், அவரைக் காண்பது இறை வணக்கத்திற்கு ஒப்பாகும்."

"அலீயைக் குறைவாய் கருதாதீர்கள், உண்மையில் அவர் என் குடும்பத்தில் இருக்கிறார்."

"அலீயே! நீர் என்னில் இருக்கிறீர், நான் உம்மில் இருக்கின்றேன்."

## ஹஜ்ரத் இமாம் ஹுஸைனாரின் மேன்மைகள்...

"அல் ஹுஸைனு மன்னீ வ அனா மினல் ஹுஸைன் - ஹுஸைன் என்னைக் கொண்டும், நான் ஹுஸைனைக் கொண்டும் உள்ளேன்."

"மிகச் சிறு வயதில் இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு தவழ்ந்து வருவதை கண்ட புனித நபிகளார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள், ஓதிக்கொண்டிருந்த ஜும்ஆ (வெள்ளிக்கிழமை) குத்பாவை பாதியில் நிறுத்தி விட்டு, மிம்பரில் இருந்து இறங்கி வந்து இமாம் ஹுஸைனாரை தமது மடியில் ஏந்தி மிம்பரில் போய் உட்கார்ந்து கொண்டு; மஸ்ஜிதில் உள்ளவர்களைப் பார்த்து, இவரை (இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹுவை) கண்ணியப்படுத்தி, சிறப்பிக்குமாறு கூறிவிட்டு குத்பாவை தொடர்ந்தார்கள்."

"ரஸுலே கரீம் முஹம்மத் முஸ்தஃபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் தொழுகையின் சமயம் ஸுஜூதின் நிலையில் இருக்கும் போது, சிறு வயதினரான இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு விளையாட்டாக தன்னுடைய நாநாவின் (பாட்டனாரின்) தோள்களில் ஏறிக் கொண்டார். தனது பேரன் தோள்களிலிருந்து இறங்கும் வரை நாயகமவர்கள் "சுப்ஹான ரப்பியல் ஆலா" என்பதை ஸுஜூதில் அதிகப்படுத்தினார்கள். தொழுகை முடிந்த பிறகு, மற்றவர்கள் நாயகத்திடம் வந்து குழந்தையை இறக்கி விட்டிருக்கலாமே! என்றனர். அதற்கு புனித நபிகளார் " நாளைக்கு இஸ்லாத்தையே! தன் தோளில் தாங்கக்கூடியவருக்காக, நான் சிறிது நேரம் என்னுடைய தோளில் தாங்கிக்கொண்டேன்" என்றார்கள்."

ஒரு முறை இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு அவர்களுடன் விளையாடிக்கொண்டிருந்த சிறுவர்களில் ஒரு சிறுவன், இமாமின் பாதம் பட்ட மண்ணை தன் முகத்தில் பூசிக் கொள்வதை பார்த்த நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி

வஸல்லமவர்களுக்கு அச்சிறுவன் மீது அதிக பிரியம் உண்டாகி விட்டது. "இன்ஷா அல்லாஹ், மறுமையில் இவனுக்காகவும் இவனுடைய பெற்றோருக்காகவும் நான் ஷஃபாஅத் செய்வேன்" என்றார்கள்.

## பஞ்சதனே பாக்! யா அலீ தூலாஷ்! ஹஸன், ஹுஸைன்...

அல்லாஹ் திருக்குர்ஆனில் "இன்னமா யுரிதுல்லாஹு லி யுஜ்(Z)ஹிப அன்குமுர் ரிஜ்(Z)ஸ அஹ்லல் பைதி வ யு தஹ்ஹிரகும் தத்ஹீரா" - நபியுடைய குடும்பாத்தார்களே! அல்லாஹ் உங்களை சகல அசுத்தங்களிலிருந்து (பாவங்களிலிருந்து) தூரமாக்கியும், சுத்தப்படுத்தியும் பரிசுத்தமாக்கிடவே விரும்புகிறான். (33:33) என்ற இறைவசனத்தை இறக்கிய போது நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் தமது போர்வைக்குள் ஹஜ்ரத் அலீ, ஹஜ்ரத் ஃபாத்திமா, ஹஜ்ரத் ஹஸன், ஹஜ்ரத் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹும் ஆகியவர்களை நிறுத்தி - இறைவா! இதோ என் வீட்டார்! இவர்களை பரிசுத்தப்படுத்துவாயாக! என்று இறைஞ்சினார்கள்.**அறிவிப்பவர் : உம்மு ஸல்மா ரஜியல்லாஹு அன்ஹா**

ஒரு போர்வைக்குள் ஐவரும் இருப்பதை பார்த்து ஒரு பெரியவர் கேட்டார், இதெல்லாம் என்ன? உமக்கு எப்படி தோன்றுகிறது என நாயகமவர்கள் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) வினவ, "ஒன்று போல்" என்ற பதிலை கேட்ட மாத்திரம், நாயகமவர்கள் ஒன்றே தான்! என்றார்கள்.

இப்படி, அல்லாஹ்வும் அவனது ரஸூலுமாகிய முஹம்மத் முஸ்தஃபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களும் நேசித்த நபியின் குடும்பத்தாரை (அஹ்லே பைத்துகளை) வரலாறு எவ்வளவு சோதனைக்குட்படுத்தியது! உதவியவர்கள் யார்? நயவஞ்சகர்கள் யார்? உலகத்தை விரும்புகிறவர்கள் யார்? 72 கூட்டங்களாக நரகை சென்றடைபவர்கள் யார்? உண்மையான மூமின்களாகிய அஹ்லே சுன்னத் வல் ஜமாத் என்பவர்கள் யார்? போன்ற கேள்விகளுக்கு காலம் தந்த பதிலையும், வரலாற்றையும் இங்கே பார்ப்போம்!

அஹ்லுல் பைத்துகள், சஹாபாக்கள், தாபயீன்கள், தபே தாபயீன்கள், அவ்லியாக்கள், இறைநேசர்கள் ஆகியோரை நேசித்து; இந்தப் புனிதர்களான நல்லோர்களின் தொடர்பினிலிருந்து விடுபடாமல், வஹாபிகளின் சூழ்ச்சிகளிலிருந்து விடுபட்டு, நம்முடைய ஈமானையும்- நமது குடும்பத்தாரின் ஈமானையும் பாதுகாப்போம்! **-ஆமீன்!**

## முதல் கலீஃபா
## ஹஜ்ரத் அபூபக்கர் சித்தீக் ரஜியல்லாஹு அன்ஹு...

நபிகள் நாயகம் முஹம்மத் முஸ்தஃபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் உலகியல் மறைவிற்கு பின் இஸ்லாமிய சாம்ராஜ்ஜியத்தை வழி நடத்தி செல்வதற்கு, கலீஃபா என்னும் இஸ்லாமிய ஆட்சியாளரை நியமனம் செய்ய அன்ஸார்களும், முஹாஜிர்களும் கலந்தாலோசித்து, இருவருள் ஒருவராய் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களோடு குகையில் தங்கியவரும்; ஹிஜ்ரத் பயணத்தின் போது நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் வலப்பக்கம், இடப்பக்கம், முன்புறம், பின்புறம் என மாறி மாறி நடந்து வந்து எதிரிகளின் தாக்குதலிருந்து காப்பாற்றுவதற்காக தன்னுரையும் இழக்க துணிந்தவரும்; தபூக் போரின் சமயம் தானமாக அனைத்தையும் கொடுத்து விட்டு, வீட்டில் எதை விட்டு வைத்து வந்திருக்கிறீர்கள்? எனக் கேட்டதற்கு அல்லாஹ்வையும் அவனது ரஸுலையும் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) என பதிலளித்ததை உலகக்கவி அல்லாமா இக்பால் இப்படி பாடுகிறார்...

پروانے کو چراغ اور بلبل کو پھول بس
صدیق کیلئے ہے خدا کا رسول بس — علامہ اقبال

**விட்டில் பூச்சிக்கு விளக்கும், புல்புல் பறவைக்கு பூவும் என்பதைப் போல சித்தீக்காகிய எனக்கு அல்லாஹ்வின் ரஸுலே போதுமானவராய் இருக்கிறார்.**

பத்ருப் போர்க்களத்தில் தன்னுடைய மகன் காஃபிர்களின் பக்கம் நின்று சண்டையிட்டதை, முஸ்லிமாக மாறிய பின்பு தமது தந்தையிடம் சொல்லிக் காட்டுகையில்,

“ஓ! தந்தையே! அந்த பத்ருப் போர்க்களத்தில், நீர் எம் வாளின் அடியில் இரண்டு முறை சிக்கினீர்கள், ஆனால் என் தந்தைப் பாசம் , ஓங்கிய என் கையை தடுத்துவிட்டது” என்பதற்கு, தந்தையாகிய ஹஜ்ரத் அபூ பக்கர் சித்தீக் அவர்கள் தம் மகனை நோக்கி, “மகனே! நீர் ஒரு முறை சிக்கியிருந்தாலும் இன்று வரை உயிருடன் இருந்திருக்க முடியாது” எனக் கூறி அல்லாஹ்வையும் அவனது ரஸுலையும் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) முன்னிலைப்படுத்தியவரும்; ஈமான் என்பது ரஸுலல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமை தம் உயிரை விட அதிகமாக

நேசிப்பதே என வாழ்ந்து காட்டியவருமான; ஹஜ்ரத் சய்யதினா அபூபக்கர் ஸித்தீக் ரஜியல்லாஹு அன்ஹுவையே தங்களின் முதல் கலீஃபாவாக தேர்ந்தெடுத்தனர்.

ஹஜ்ரத் பஷீர் இப்னு ஸஅத் ரஜியல்லாஹு அன்ஹுவும், ஹஜ்ரத் உமர் இப்னு கத்தாப் ரஜியல்லாஹு அன்ஹுவும் எல்லோரையும் முந்திக்கொண்டு, ஹஜ்ரத் அபூபக்கர் ஸித்தீக் ரஜியல்லாஹு அன்ஹுவைப் பார்த்து “நீட்டுங்கள் உங்கள் கையை” எனக் கூறி சத்தியப்பிரமாணம் (பைஅத்) செய்தனர். அவர்களை தொடர்ந்து மற்ற அன்ஸார்களும், முஹாஜிர்களும் சத்தியப்பிரமாணம் (பைஅத்) செய்துக் கொடுத்தனர்.

ஹிஜ்ரி 11ம் ஆண்டு (கி.பி 632) ரபீயுல் அவ்வல் மாதத்தின் ஒரு செவ்வாய்க் கிழமை குலஃபாயே ராஷிதீன் என்னும் நேர்வழி காட்டப்பெற்ற கலீஃபாக்களின் ஆட்சியின் துவக்க நாளாகும். அதிகாரத்தை கையில் எடுத்துக் கொண்டு, தவறுதலாக அநீதி விளைவித்து விட்டால், அல்லாஹ்வின் முன் நாணிக் குறுக நேரிடுமே! எனப் பயந்த போதும், வலிய வந்து பதவி தம் தோள்களில் சுமத்தப்பட்டதை உணர்ந்தவர்களாய், மக்களிடையே துவங்கிய பிரிவினையைத் தவிர்க்க வேண்டியவர்களாக உணர்ந்து பதவியை ஏற்று, மஸ்ஜிதுன் நபவியில், மக்கள் முன் நின்று சொற்பொழிவாற்றிய முதல் உரையில்...........

## முதல் கலீஃபாவின் முதல் உரை...

“ஓ, மக்களே! நான் உங்கள் தலைவனாக தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறேன், இருப்பினும் உங்களைக் காட்டிலும் நான் சிறந்தவன் அல்ல. நான் ஏதாவது தவறுகள் செய்தால், என்னை திருத்துங்கள். கவனியுங்கள்! உண்மையானது நேர்மையையும்; பொய்யானது அநீதியையும் கொடுக்க வல்லது. உங்களில் எளியவர் அவருக்கு இழைக்கப்பட்ட அநீதி அகற்றப்படும் வரை என்னிடம் வலியவராகவே இருப்பார்கள். உங்களில் வலியவர்கள் அநீதியிழைக்கையில் என்னிடம் எளியவராகவே இருப்பார்கள்!

கவனமாக கேளுங்கள், எவரொருவர் அல்லாஹ்வின் பாதையில் போரிடுவதிலிருந்து (நஃப்ஸ் என்னும் இச்சை போராட்டத்திலிருந்து) பின்னடைகிறாரோ அவரை அல்லாஹ் இழிவுப்படுத்துவான். எந்தச் சமூகத்தில் தீமைகள் மலிகின்றனவோ அதன் மீது அல்லாஹ் சோதனைகளை இறக்குவான்.

நீங்கள் எனக்கு கட்டுப்படுங்கள், அல்லாஹ்வையும் அவனது ரஸூலையும் (ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம்) நான் கட்டுப்படும் வரை, அல்லாஹ்வுக்கும் அவனது ரஸூலுக்கும் (ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம்) நான் கட்டுப்படாவிட்டால், நீங்களும் எனக்கு கட்டுப்படுவதிலிருந்து விலக்கு அளிக்கப்படுவீர்கள்!”

புதிதாக இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டவர்கள் ஜகாத் கொடுக்க மறுப்பு தெரிவித்த போது, கலீஃபா அவர்கள் அல்லாஹ்வின் மீது ஆணையாக ஒரு ஒற்றை நூலின் அளவு ஜகாத் கொடுக்க வேண்டியவன், அதை உரியவர்களிடம் கொடுத்து விடட்டும், அவர் அதை அப்படி கொடுக்க மறுத்தால், அவருக்கெதிராக நான் போர்த்தொடுப்பேன் எனக் கூறி மக்களை நல்வழிப்படுத்தினார்கள்.

நயவஞ்சகம் மிகுந்த யஹூதிகள், நஸ்ராணிகள் மக்களிடையே குழப்பம் விளைவித்த சமயத்திலும், முஸைலமா, அஸ்வத் அன்ஸி, துலைஹா போன்ற பொய்யர்கள் தங்களை நபி என்று கூறி மக்களை குழப்பத்தில் ஆழ்த்திய சமயத்திலும் கலீஃபா அவர்கள் துரித நடவடிக்கையை எடுத்து மக்களை காப்பாற்றினார்கள். கலீஃபா அவர்களின் முயற்சியால், இஸ்லாமியர்களுக்கு எதிராக தொல்லைகளை கொடுத்து வந்த ஈரானியர்கள் மற்றும் ரோமானியர்கள் அடக்கப்பட்டார்கள். 24,000 நபரைக் கொண்ட இஸ்லாமிய படை 1,50,000 நபரைக் கொண்ட ரோமானிய படையை எதிர்த்து வெற்றிப் பெற்றது, கலீஃபா அவர்களின் ஆன்மீக ஞானம் தம் படை வீரர்களுக்கு பாய்ச்சப்பட்டு வீர உரமூட்டியதே காரணமாகும்.

“தக்வா” என்னும் இறையச்சத்தை தம் உள்ளத்தில் சுமந்த கலீஃபா அவர்கள், சாதாரண ஆடைகளை உடுத்தியவர்களாய், எளிய உணவுகளை உண்டவராய், பகலில் நோன்பு நோற்பவராய், இரவு முழுவதும் இபாதத்தில் (இறை வணக்கத்தில்) கழித்தவராய், மாளிகைகள் இல்லாமல், தன்னை சூழ படைவீரர்கள் இல்லாமல் தன்னந்தனியாக புனித மதீனத்து தெருவில் வறியவர்களுக்கு உதவியராய் தம்முடைய காலத்தை நடத்தியவர், தம்முடைய 63 வயதில் ஹிஜ்ரி 13ம் ஆண்டு ஜமாதி யுல் ஆகிர் 21ம் நாள் (22Aug 634) உலகத்தின் அன்றாட வாழ்க்கையிலிருந்து மறைந்து வாழ ஆரம்பித்தார்கள். கலீஃபா அவர்களுடைய ஆட்சிக்காலம் 2 ஆண்டு காலம் 3 மாதங்கள் ஆகும்.

## ரஸூலின் ரவ்ளாவிலிருந்து அழைப்பு…

கலீஃபா அவர்களின் புனித உடல் அவரது இறுதியுறைப்படி, அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்களின் திருக்கரங்களால் நீராட்டப்பெற்று கஃபனிடப்பட்டது. உமர் ரஜியல்லாஹு அன்ஹுவினால் தொழுகை நடத்தப்பெற்று, நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் ரவ்லா ஷரீஃபின் வாசல் முன் வைத்துக் கொண்டு நின்று “**அஸ்ஸலாமு அலைக்க யா ரஸூலல்லாஹ், ஹாதா அபூபக்கர்….**” என்று கூறிய போதே இடையிலிருந்து “**உத்குலுல் ஹபீப இலல் ஹபீப் - நேசரை நேசரின் பக்கம் வர விடுங்கள்**” என்ற புனித குரலின் அழைப்பினை அனைவரும் செவியுற்று புனித நபிகளார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் புனித நெஞ்சுக்கு நேராக கலீஃபா அவர்களின் புண்ணியத் திருமுகம் இருக்கும்படி அடக்கம் செய்யப்பட்டது.

கவி புனையும் திறன் பெற்றிருந்த கலீஃபா அவர்கள், ஒரு முறை விளையாடிக் கொண்டிருந்த இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹுவை தம் கைகளில் தூக்கிக் கொண்டு “என் தாய்-தந்தை தங்களுக்கு அர்ப்பணம்! சாயலில் நீங்கள் ஈருலகத்தின் நாயகர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமை போல் அல்லவா இருக்கிறீர்கள்? அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுவைப் போல் ஒத்தில்லையே! என்ற பொருள் பட கூறிய கவிதையை அருகிலிருந்த ஹஜ்ரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுவும் ரசித்து மகிழ்ந்தார்கள்.

## இரண்டாம் கலீஃபா
## ஹஜ்ரத் உமர் ஃபாருக் ரஜியல்லாஹு அன்ஹு...

கண்மணி நாயகம் முஹம்மத் முஸ்தஃபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் தலையை கொய்தே திரும்புவேன் (நவூதுபில்லாஹ் பில்லாஹி மின் ஜாலிக்) என வாளோடு சூளுரைத்து கிளம்பியவர்; அல்லாஹ்வின் பேச்சுக்களை வேத வசனங்களாக கேட்டதும் நெஞ்சம் படபடத்து, நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் கண்களை ஏறிட்டு பார்க்க முடியாமல் நாணிக்குறுகி இஸ்லாத்தை ஏற்றவரும், நபித்துவம் என்னுடன் முற்றுப்பெறாதிருந்தால் உமர் (ரஜியல்லாஹு அன்ஹு) நபியாக தகுந்தவரே என ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களால் புகழப்பட்ட அல்ஃபாருக்குல் ஆஜம் சய்யதினா உமர் ரஜியல்லாஹு அன்ஹு அவர்களையே, ஹஜ்ரத் அபூபக்கர் ஸித்திக் ரஜியல்லாஹு அன்ஹு தம்முடைய தோழர்களான சஹாபா பெருமக்களிடம் கலந்தாலோசித்து இரண்டாம் கலீஃபாவாக நியமனம் செய்தார்கள். அதனைத் தொடர்ந்து கலீஃபா உமர் ஃபாருக் ரஜியல்லாஹு அன்ஹுவின் கரங்களில் முஹாஜிர்களும், அன்ஸார்களும், பெருமக்களும் சத்தியப்பிரமாணம் (பைஅத்) செய்தார்கள்.

### இரண்டாம் கலீஃபாவின் முதல் உரை...

ஹிஜ்ரி 13ம் ஆண்டு ஜமாதியுல் ஆகிர் மாதம் 23ம் நாள் கிலாஃபத் என்னும் பொறுப்பினை கலீஃபா ஏற்றுக்கொண்டார்கள். மஸ்ஜிது நபவியின் முன் நின்ற மக்களை நோக்கி மூமின்களின் தலைவர், "மக்களே நானும் உங்களில் ஒருவனே!, கலீஃபா அபூபக்கர் சித்தீக் ரஜியல்லாஹு அன்ஹுவின் கட்டளையை புறக்க என் மனம் நாடியிருந்தால், ஒருக்காலும் கிலாஃபத் என்னும் இப்பொறுப்பினை ஏற்றிருக்க மாட்டேன்" என்று சற்று தழதழத்த குரலில் கூறியவராக தம் கைகளை உயர்த்தி "யா அல்லாஹ்! நான் வன்மமுடையவனாக இருக்கிறேன், நீ என்னை மென்மைப்படுத்துவாயாக. நான் பலஹீனமாக இருக்கிறேன்,நீ என்னை வலிமைப்படுத்துவாயாக, தயக்கத்தை விட்டு என் இதயத்தை அகலப்படுத்துவாயாக" என்று பணிவுடனும் அடக்கத்துடனும் இறைஞ்சிய விதம் மக்களின் உள்ளங்களில் பற்றியிருந்த கலீஃபாவினுடைய அச்சத்தையும் திடுக்கத்தையும் தனியச் செய்தது.

ஒரு சிறு மவுனத்திற்கு பிறகு உறுதியான குரலில் "மக்களே!

இது எனக்கும் உங்களுக்கும் ஒரு கடுமையான சோதனைக்காலமாகும். அல்லாஹ்வின் மீது ஆணையாக, என்முன் வரும் உங்களின் எல்லா பிரச்சினைகளுக்கும் நானே தீர்வு காணுவேன். என்னிடம் ஒப்படைக்கப்படும் பொறுப்பினை நான் கைநழுவ விடமாட்டேன். நல்வழியை நாடுபவர்கள் என்னிடமிருந்து நன்மைகளையே காணப்பெறுவர். தவறான சிந்தனை படைத்தவர்களுக்கு- மற்றவர்களும் அறிந்து உணரும் வகையில், நான் சரியான பாடம் புகட்டுவேன். நீங்கள் என்னை உள்ளன்போடு ஏற்றுக்கொள்வீர்கள் என்றே நான் நம்புகிறேன். நானும் உங்களிடையே நெறி தவறாது ஊழியம் புரிவேன் என்று உறுதி கூறுகிறேன். சமுதாயத்தை நேர்வழியினில் செலுத்த வழிகாட்டி மீது கடமையாகிறது, காபாவின் இரட்சகன் அல்லாஹ்வின் மீது ஆணையாகச் சொல்கிறேன் - நான் உங்களை நேரான வழியினில் அழைத்துச் செல்வேன்".

வியர்வையால் தொப்பலாடிய 12 ஒட்டுகளிடப்பட்ட ஓர் சட்டையை அணிந்திருந்த கலீஃபா அவர்கள், தோலினாலான ஒரு சாட்டையை மட்டும் கையில் ஏந்தி உலா வந்த போது மனிதர்கள் மட்டுமல்ல, காற்றும், நெருப்பும், கடலும், கரையும் அவருக்கு பணிந்து நின்றன. எனவே வரலாற்றாசிரியர்கள் நீதி என்றால் மறுபெயர் உமர் ஃபாருக் ரஜியல்லாஹு அன்ஹுவே! என்று கூறுகின்றனர்.

## நல்ல நிர்வாகம்...

கலீஃபா அவர்களின் ஆட்சிக்காலத்தில் இஸ்லாமிய ஆட்சி 22 லட்சத்து 51 ஆயிரத்து 30 சதுர மைல்கள் பரவியது. இஸ்லாத்திற்கு தொல்லை கொடுத்து வந்த பாரஸீகர்களும், ரோமானியர்களும் அடக்கப்பட்டனர். சமுதாயப் பணிக்கு தேவையாக **"பைத்துல் மால்"** என்னும் பொதுக்கருவூல சொத்து நிறுவப்பட்டு ஏழை, எளியவர் நலனுக்கும், நாட்டின் பொருளாதார வளர்ச்சிப் பணிக்கும் பயன்படுத்தப்பட்டது. நீதிமன்றங்களும் நீதிபதிகளும் அமைக்கப்பட்டு பிரச்சினைகள் அதன் மூலமாக தீர்க்கப்பட்டது. இராணுவத் தலைமையிடம் அமைக்கப்பட்டு நாட்டின் பாதுகாப்பு உறுதி செய்யப்பட்டது. சாலைகளும் வாய்க்கால்களும் அமைக்கப்பட்டது. மதரஸாக்கள் நிறுவப்பட்டு, சொல்லிக்கொடுக்கும் ஆசிரியருக்கு ஊதியம் நிர்ணயிக்கப்பட்டது. காவல் நிலையங்களும் சிறைச்சாலைகளும் அமைக்கப்பட்டு தவறு செய்பவர்களுக்கு சரியான தண்டனையும் கொடுக்கப்பட்டது. **"ஹிஜ்ரி"** என்னும் இஸ்லாமிய ஆண்டு கணக்கிடும் முறை

மக்களிடையே அறிமுகப்படுத்தப்பட்டது. மக்கள் தொகை கணக்கெடுப்பு, எடைக்கற்கள் அறிமுகப்படுத்தப்பட்டு எடை நிர்ணயம் மற்றும் அளவு சோதனை செய்யப்பட்டது. ஆதரவற்றவர்களுக்கு ஆதரவு நிலையங்கள் அமைத்தல் போன்ற சமுதாயப்பணிகள் மேற்கொள்ளப்பட்டு மக்களின் தேவைகள் நிறைவேற்றப்பட்டது.

**கராமத் அற்புதங்கள்...**

ஆன்மீக ஞானத்தால் திளைத்திருந்த கலீஃபா அவர்கள் வறண்டு போன நைல் நதிக்கு கடிதம் எழுதி, அதை வற்றாத ஜீவநதியாக மாற்றினார். தம்முடைய போர்வையால் எரிமலையின் கக்கும் சீற்றத்தை கட்டுப்படுத்தினார்கள். தம்முடைய மறைவான ஞானத்தால், தம்மை காண வந்த குழுவினரிடத்தில் “உஷ்த்தர்” என்பவனை பார்த்து அல்லாஹ் இவனை அழிப்பானாக இவனின் தீமையை விட்டும், குழப்பத்தை விட்டும் இச்சமுதாயத்தை காப்பானாக என இறைஞ்சினார்கள். (20 ஆண்டுகளுக்கு பிறகு உஸ்மான் ரஜியல்லாஹு அன்ஹுவை கொலை செய்த துரோகிகளில் இவனும் ஒருவன் என்பது பின்னாளில் தெரிய வந்தது) ஒரு முறை ஸிரியாவின் மீது போர்த்தொடுக்க படை திரட்டுகையில் ஒரு குழு வந்தது, அக்குழுவை கண்டவுடன் கலீஃபா அவர்கள் வெறுப்புடன் முகத்தை திருப்பிக் கொண்டு, படையில் சேர்த்துக் கொள்ளவும் மறுத்து விட்டார்கள். (20 ஆண்டுகளுக்கு பிறகு உஸ்மான் ரஜியல்லாஹு அன்ஹுவை தாக்கிய அஸ்வத் தபீபி என்பவனும், 24 ஆண்டுகளுக்கு பிறகு கூஃபாவில் ஹஜ்ரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுவை கொலை செய்த அப்துர் ரஹ்மான் இப்னு முல்ஜிம் முராதி என்பவனும் அக்குழுவில் இருந்ததை மக்கள் பின்னாளிலே உணர்ந்தனர்)

புனித மதீனாவின் வீதியில் கலீஃபா நடந்துக் கொண்டு செல்கையில் “ஃபரோஸ்” என்னும் பாரஸீகன் கலீஃபாவிடம் முறையிட்டு திரும்பி செல்கையில், அவனை சிறிது நேரம் கவனித்த கலீஃபா அவர்கள், “அவன் பேச்சில் எனக்கொரு மிரட்டல் தெரிகிறது” என ஹஜ்ரத் அப்துல்லாஹ் ரஜியல்லாஹு அன்ஹுவிடம் தெரிவித்தார்கள்.

மறுநாள் காலை ஃபஜ்ரு தொழுகையின் போது ஃபரோஸ், கலீஃபா அவர்களை, பின் பக்கத்திலிருந்து 6 முறை குறுவாளால் குத்திவிட்டு, தப்பிக்க வழியின்றி தன்னையும் மாய்த்துக் கொண்டான். நஸ்ரானியான ஜஃபினாவும், பாரஸீக ஹர்முஸானும்

கொலைத்திட்டத்திற்கு உதவியவர் என்பது பின்னாளில் கண்டுபிடிக்கப்பட்டது. இதில் ஹர்மூஸான் என்பவன் இஸ்லாத்தை ஏற்று கொண்டது போல் நடித்து நயவஞ்சகம் (வஹாபி) செய்தவன் ஆவான்.

63 வயதை எட்டியிருந்த கலீஃபா அவர்கள், ஹிஜ்ரி 23ம் ஆண்டு துல்ஹஜ்ஜு மாதம் கடைசி நாள் (குறுவாளால் தாக்கப்பட்ட நாளிலிருந்து 3 வது நாள்) வலியின் கொடுமையை தாங்கிக் கொண்டு என்றும் இறவா வாழ்க்கைக்கு, நுழைவிடமான இறப்பு என்ற போர்வையைக் கொண்டு உலக வாழ்க்கையிலிருந்து மறைந்து வாழ (ஷஹீதானார்கள்) ஆரம்பித்தார்கள்.ஹஜ்ரத் அவர்களின் புனிதமிகு மஜார் ஷரீஃப் முதல் கலீஃபாவின் அருகிலேயே உள்ளது. 2ம் கலீஃபா அவர்களின் மொத்த ஆட்சிக்காலம் 10 வருடங்கள் 6 மாதங்கள் 4 நாட்கள் ஆகும்.

**அடிமை சாசனமும் ரவ்ளா சாட்சியும்...**

ஒரு முறை இளவயதினராக இருந்த இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு! 2ம் கலீஃபாவின் மகனான அப்துல்லாஹ் ரஜியல்லாஹு அன்ஹுவிடம், “உன் தந்தை என் பாட்டனாரின் அடிமைதானே”! என்று கூறியதை, தம் தந்தையான கலீஃபாவிடம் கூறி குறைபட்டுக் கொண்டார் அப்துல்லாஹ் ரஜியல்லாஹு அன்ஹு. இதை விசாரிப்பதற்காக தம் மகனுடன் சென்ற 2ம் கலீஃபா, இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹுவை கண்டதும், “தன் மகனிடம் கூறியதை திரும்ப கூறுங்கள்” என வினவியதும், இமாமவர்கள் “நீங்கள் என் பாட்டானாரின் அடிமைகள் தானே!” என பதிலளித்ததும், ஆனந்தக் கண்ணீருடன் இமாமை கட்டித்தழுவி, அவரைக் கையில் பிடித்துக் கொண்டு, நேராக ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் புனித ரவ்லா முபாரக்கிற்கு சென்ற 2ம் கலீஃபா அவர்கள் “யா! ரஸுலல்லாஹ்! ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் என்னுடைய தாய்-தந்தை தங்களுக்கு அர்ப்பணம்! இதோ, உங்கள் பேரனார் -இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு எங்களை, உங்களின் அடிமை என்று சாட்சியம் கூறுகிறார்கள்”, எனக் கூறி அதை அப்படியே எழுதச் செய்து, இமாமவர்களின் கையெழுத்தையும் இடச்செய்து-அதை பத்திரப்படுத்தி கொண்டார்கள். கலீஃபா அவர்கள் இறக்கும் வேளையில், இந்த சாட்சிப்பத்திரத்தை தன் தலையின் அடியில் வைத்துவிடவும் கூறினார்கள். இதனால் உமரின் ( ரஜியல்லாஹு அன்ஹு) முழுச் சந்ததியினருக்கும் மறுமைப் பலன் உண்டாகும் என கூறி அகமகிழ்ந்து கொண்டார்கள்.

## மூன்றாம் கலீஃபா
## ஹஜ்ரத் உஸ்மான் கனீ ரஜியல்லாஹு அன்ஹு...

ஹஜ்ரத் உமர் ஃபாருக் ரஜியல்லாஹுு அன்ஹுு தமது இறுதிக்கட்டத்தை உணர்ந்தவர்களாக, ஹஜ்ரத் உஸ்மான், ஹஜ்ரத் அலீ, ஹஜ்ரத் தல்ஹா, ஹஜ்ரத் ஜுுபைர், ஹஜ்ரத் அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப், ஹஜ்ரத் ஸஅத் இப்னு அபீவக்காஸ் ரஜியல்லாஹுு அன்ஹுும் அஜ்மயீன் ஆகிய 6 நபர்களை கொண்ட குழுவை அமைத்து தங்களுக்குள் 3 வது கலீஃபாவை தேடிக்கொள்ளுங்கள் என்றும், தன்னுடைய மகன் அப்துல்லாஹ் ரஜியல்லாஹுு அன்ஹுு ஆலோசனையில் கலந்துக் கொள்ளட்டும் ஆனால் நிச்சயமாக கலீஃபாவாக தேர்ந்தெடுக்க படக்கூடாது என்றும் கட்டளையிட்டார்கள்.

ஹஜ்ரத் அப்துர் ரஹ்மான் ரஜியல்லாஹுு அன்ஹுு மூன்று பகல் மூன்று இரவு மக்களிடையே கலந்துரையாடி மக்களின் மனோபாவங்களை ஆராய்ந்து பார்த்ததில், மக்களின் துயர் களைய உள்ளத் தாராளம் கொண்டவரும்; மென்மையும், கருணையும் கொண்டவரும்; நாயகம் முஹம்மத் முஸ்தஃபா ஸல்லல்லாஹுு அலைஹி வஸல்லமவர்களின் இரு பெண்களை மணமுடித்து ஜுுன்னூரைன் (இரு ஒளிகளை பெற்றவர்) பட்டம் பெற்றவரும்; விண்ணவரும் நாணும் வகையில் நாணக்குணத்தை உடையவரும்; பொறுமை குணத்தின் இலக்கணமான உஸ்மான் கனீ ஜுுன்னூரைன் ரஜியல்லாஹுு அன்ஹுுவையே மக்கள் தங்களின் கலீஃபாவாக ஏற்றுக் கொள்ள தயாராக இருக்கிறார்கள் எனத் தெரிய வந்தது.

ஹிஜ்ரி 24 முஹர்ரம் மாதம் 4ம் நாள் மஸ்ஜிதுன் நபவியின் முன் கூடியிருந்த மக்கள் திரள் முன்னே, ஹஜ்ரத் உஸ்மான் ரஜியல்லாஹுு அன்ஹுுவையே கலீஃபாவாக அறிவித்து ஹஜ்ரத் அப்துர் ரஹ்மான் ரஜியல்லாஹுு அன்ஹுு முதலாவதாகவும், ஹஜ்ரத் அலீ கர்மல்லாஹுு வஜ்ஹஹுு இரண்டாவதாகவும் 3ம் கலீஃபாவின் கைகளில் “பைஅத்” (சத்தியப்பிரமாணம்) செய்தார்கள். இதனைத் தொடர்ந்து மற்ற சஹாபா பெருமக்களும், மக்களும், பைஅத் செய்து கொடுத்தனர்.

### நாண உரை...

70 வயதைக் கடந்த கலீஃபா அவர்கள் மக்களை நோக்கி, “மக்களே! புதிதாக குதிரை ஏற்றம் புரிகிறவன் படக் கூடிய சங்கடம்

உங்களுக்கு புரியாமல் இருந்ததல்ல, நான் உரையாற்ற பழக்கம் பெற்றவனல்ல! இன்ஷா அல்லாஹ்! உரையாடக்கூடிய ஞானத்தை அல்லாஹ் எனக்குத் தருவான், அல்லாஹ் நாடினால், நான் நாளை உங்களிடம் முறையோடு உரையாற்றுவேன்" என தன்னுடைய நாண உணர்வினால் நாவை கட்டுப்படுத்திக் கொண்டார்கள்.

மறுநாள் காலையில் அதே இடத்தில், கலீஃபா அவர்கள் அல்லாஹ்-ரஸூலை போற்றிப்புகழ்ந்தவர்களாக, "என் மக்களே! என்னிடம் ஒப்படைக்கப்பட்டுள்ள இப்பொறுப்பை நான் ஏற்றுக் கொண்டேன், ஐயமின்றி நான், எனக்கு முன் கிலாஃபத் செய்தவர்களை தொடர்பவனேயன்றி, சுயமே தனி வழி காண்பவனல்ல. அல்லாஹ்வுக்கு அஞ்சிக் கொள்வதே இலாபந்தரக் கூடியதாக உள்ளது! நாம் வாழ்ந்து கொண்டிருக்க கூடிய இவ்வுலகம் கை மாறி விடக் கூடிய ஒரு வீடாக இருக்கிறது.

நம்முடைய வாழ்நாளோ நிலையற்றதாக இருக்கிறது. மறுமையின் பேறுகளுக்கு இவ்வுலகம் எந்த ஒரு விலையுமே ஆகாது. இதன் சுகபோகங்கள் நிலையானவையும் அல்ல. இதன் சிரமங்களும் சோதனைகளும் நீடித்திருப்பவையுமல்ல, அற்பமான இவ்வுலகின் ஆடம்பரப் பகட்டுகள் உங்களை வஞ்சித்து விடக் கூடாதே! என நான் கவலையுறுகிறேன்.

மூன்று விஷயங்கள், உங்களிடையே குழப்பத்தையும், வழிகேடுகளையும் உண்டாக்கி விடும் என நான் உங்களுக்கு நினைவூட்டி எச்சரிக்கை செய்கிறேன்.

### முக்கிய விஷயங்கள் மூன்று...

1. செல்வத்தின் பெருக்கமும், சுக போகங்களின் தேட்டமும்.
2. கட்டுப்பாடற்ற கீழ்த்தனமான, பெண் தொடர்பு.
3. திருமறையை தவறாக விளக்கம் கொள்ளல்.

முஸ்லிம்களாகிய நாம் ஒரு கட்டுப்பாட்டிற்குட்பட்ட சமூகத்தவர்கள்! அந்தக் கட்டுப்பாட்டை மற்றவருக்கும் கற்பிக்க கடமை பட்டவர்கள். நான் உங்களிடம் வேண்டுவதெல்லாம் மார்க்கத்தை மனத்தூய்மையுடன் பேணுங்கள். உண்மையை நிலை நிறுத்துங்கள்! உங்களிடையே உள்ளன்பும், ஒற்றுமையும் நிலவச் செய்யுங்கள். வரம்புகளை மீறாதிருங்கள், அல்லாஹ்வின் கோபத்திற்கு ஆளாகாதீர்கள். மரணம் எந்தக் காலையிலோ, மாலையிலோ வருவதற்கு முன் நன்மைகளை தேடிக்கொள்ளுங்கள்.

அறிவுடையோர்களில் மேலானவன் தன் செயல்களைப் பற்றி சிந்திப்பவனே! மறுமைக்கான தேவையை வாழ்நாளில் தேடிக்கொள்பவனே! ”என்றார்கள்.

## முத்திரை மோதிரம் மறைதல்...

முஹம்மத் முஸ்தஃபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் அரசாங்க முத்திரைக்காக 5 ஆண்டு காலம் பயன்படுத்திய **“அல்லாஹ்-ரஸூல்-முஹம்மத்”** என்ற திருமந்திரம் பொருந்திய மோதிரம், முதல் கலீஃபாவின் கரங்களில் **2 1/4** ஆண்டும், 2ம் கலீஃபாவின் கரங்களில் **10 1/2** ஆண்டும், 3ம் கலீஃபாவின் கரங்களில் முதல் **6** ஆண்டும் ஆட்சி புரிந்தது. பீரே அரீஸ் என்ற கிணற்றில் தவறி விழுந்த அந்தப் புனித மோதிரம் எவ்வளவு தேடியும் மாயமாய் மறைந்தது. ரஸூலல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் பொன்னுடலோடு ஒட்டி உறவுக்கொண்டிருந்த மோதிரத்தின் அருளால் கிலாஃபத் என்னும் நேரிய ஆட்சியில் சோதனைகள் சூழாமல், கலகங்கள் கலங்க செய்யாமல், அச்சங்கள் அணுகாமல் ஆட்சி நடந்தேறியது. புனித மோதிரம் தொலைந்து போன நாள் முதல் 3ம் கலீஃபாவின் நிம்மதி அனைத்தும் தொலைந்து போயின. சோதனைகளும், குழப்பங்களும் சூழ ஆரம்பித்தது!

கிழக்கிலும் மேற்கிலும் இஸ்லாம் விரிந்து பரவி முஸ்லிம்களின் எண்ணிக்கை கோடியைத் தாண்டியது. கனிசமான அளவில் செல்வமும் முஸ்லிம்களிடையே பெருகியது. பரிசுத்தவான்களுக்கு பற்றாக்குறை ஏற்படவே பொறாமை, பூசல், குரோதம், வன்மம், ஒழுக்கமின்மை, போன்ற குணக்கேடுகள் முளைவிட்டு துவங்கிய நேரத்தை பயன்படுத்திக் கொண்ட நஸ்ராணிகளும், யஹூதிகளும்; இஸ்லாமியர்களையும்,இஸ்லாமிய மார்க்கத்தையும் குழப்பி பிளவுப்படுத்தி விட்டு ஆதிக்கத்தை தங்களின் பக்கம் மீட்டுக்கொள்ள துரிதமாக செயல்பட்டனர்.

ஏமன் நாட்டிலிருந்து வந்த யஹூதிகளில் ஒருவன், தனது பெயரை இப்னு ஸபா என்று மாற்றிக் கொண்டு தானும் ஒரு முஸ்லிம் என்ற நயவஞ்சக போர்வைக்குள் ஒளிந்துக் கொண்டு மக்களிடையே நச்சுக் கருத்துக்களையும், முஸ்லிம்களிடையே திருக்குர்ஆனின் ஒரு சில வசனங்களை ஓதிக்காட்டி தவறான அர்த்தத்தையும், மக்களின் அறிவின்மையை தமக்கு சாதகமாக பயன்படுத்தி, முன் ஒன்று, பின் ஒன்று பேசி இரு சாரார்களிடையே (உமையா, ஹாஷிம் கோத்திரர்களிடையே) பகைமையையும்,

குரோதத்தையும் வளர்த்து விட்டிருந்தான்.

## தப்லீக் ஜமாஅத் போன்ற குழப்பம்...

ஞானம் நிறைந்து விளங்கிய மதீனா திருநகரில் இப்னு ஸபாவினுடைய செயல் எடுபடாததால் கூஃபா, ஸிரியா, எகிப்து போன்ற இடங்களில் மறைந்துக் கொண்டு தமக்கு ஆதரவான உலகாசை பேய்களை சீடர்களாக்கி கொண்டு தெருவின் முச்சந்திகளிலும், ஓரிருவர் சந்திக்குமிடத்திலும் இல்யாஸின் தப்லீக் ஜமாத்தார்கள் போல மக்களிடம் பரிவுடன் பழகி பக்கத்து தேசத்தில் மக்கள் நலமாய் இல்லை! மகாணங்களின் ஆளுநர்கள் முறை தவறி மக்களை வதைக்கின்றனர், கிலாஃபத் ஆட்சியில் ஒழுங்கு முறை இல்லை. கலீஃபா ஆட்சி செய்ய தகுந்தவர் அல்ல! என்று பாமர மக்களை மனம் குழப்பி, தமக்கு ஆதரவாளர்களை சேர்த்துக் கொண்டே இருந்தனர் இந்தக் கயவர்கள்.

சந்தர்ப்பங்களையும், சூழ்நிலைகளையும் விளங்கிக்கொள்ள இயலாத அறிவீனர்களும், பாமரர்களும் கலகக்காரர்களோடு சேர்ந்துக் கொண்டு மகாணங்களின் ஆளுநர்களை மாற்றியே தீர வேண்டும் ( ஆளுநரின் மாற்றம் - நயவஞ்சக செயல்களுக்கு -இஸ்லாத்தை பிளவுப் படுத்துவதற்கு சாதகமாகவே அமையும் என்பது இஸ்லாமிய விரோதிகளின் கணிப்பாகும்) என ஆங்காங்கே போராட்டங்களிலும் கிலாஃபத்தை எதிர்ப்பதிலும் மும்முரம் காட்டினர். ஆனால் கலீஃபாவை கொலை செய்யும் அளவிற்கு அவர்களின் மனநிலை மாறவில்லை என்பதுதான் உண்மை, ஆனால் அப்பாவியர்களோடு ஒன்றியிருந்த நயவஞ்சகர்கள் கலீஃபாவை எப்படியேனும் கொலை செய்துவிட்டு, சாதரண அப்பாவியர்களின் தலையில் கொலைப்பழியை போட்டுவிட்டு, உலகத்தின் பார்வையிலிருந்து மறைந்துக் கொண்டு, இஸ்லாமியத் தலைவர்கள் ஒவ்வொருவரையும் கொன்று தீர்த்து விட்டால் இஸ்லாத்தை வேருடன் அழித்து விடலாம் என்ற தங்களின் தீவிரவாத செயல்களை நடத்தேறினர்.

பதுங்கிப் பதுங்கியே விஷமிகள் வினையை விதைத்து கொண்டிருப்பதை கண்ட சஹாபா பெருமக்கள், மொத்த கலகக்காரர்களின் மேல் போர்த்தொடுக்க அறிவுறுத்தியதை கலீஃபா அவர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை, காரணம் .... எந்த ஒரு முஸ்லிமின் உயிரும் அநீதமாகக் கொல்லப்பட விரும்பவில்லை, மேலும் மார்க்கத்தை அவர்கள் புறக்கணிக்காதவரை, அதன் வரம்புகளை கடக்காதவரை எவரையும் கொல்ல நான் அனுமதிக்க

மாட்டேன் என்று கலீஃபா அவர்கள் தடுத்து விட்டார்கள்.

சிரியாவின் ஆளுநராக இருந்த ஹஜ்ரத் முஆவியா ரஜியல்லாஹு அன்ஹு அவர்கள் ஹஜ்ரத் அலி, ஹஜ்ரத் ஜுபைர், ஹஜ்ரத் தல்ஹா ரஜியல்லாஹு அன்ஹும் ஆகியோர்களை சந்தித்து "நான் உங்களிடம் முதுமை அடைந்த மேலானவரை ஒப்படைத்து விட்டு பிரிந்து செல்கிறேன், அல்லாஹ்வின் அந்த கலீஃபாவின் அருகிலேயே இருந்து, நீங்கள் அவருக்கு துணைபுரியுங்கள்" என்றார். அந்தக் கலகக்காரர்கள் மூன்று கூட்டங்களாக பிரிந்து ஹஜ்ரத் அலி, ஹஜ்ரத் ஜுபைர், ஹஜ்ரத் தல்ஹா ரஜியல்லாஹு அன்ஹும் ஆகியோர்களை தனித்தனியாக சந்தித்து, "தங்களை கலீஃபாவாக ஆக்கிடவே நாங்கள் வந்துள்ளோம்" எனக் கூறினார்கள். ஆனால் அம்மூவரும் அப்பொய்யர்களின் பேச்சை நம்பாமல் கலகக்காரர்களை நோக்கி, ரஸுலல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் முன்னறிவித்த "இறைவனால் சபிக்கப்பட்ட கூட்டத்தினர் தீ கஷ்ஃபிலும், தீ மர்வாவிலும், அசுவஸிலும் பாளையமிறங்குவர்" என அவர்கள் பாளையமிங்கிய இடத்தை சுட்டிக்காட்டி அவர்களை புறக்கணித்தனர். எனினும் கலகக்காரர்கள் ஹஜ்ரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஜஹுவின் ஆதரவாளர்கள் என்ற மாயத்தோற்றத்தை பாமர மக்களிடையே ஏற்படுத்தினர்! (காரணம் - குழப்பத்தை மேலும் அதிகப்படுத்தவே!)

**மூன்றாம் கலீபாவை காப்பாற்றிய இமாம் ஹஸன் இமாம் ஹுஸைன்...**

ஒரு ஜும்ஆ பயானில், சொற்பொழிவாற்றிக் கொண்டிருந்த 3ம் கலீஃபா மீது, கலகக்காரர்கள் கல் எறிந்து அடித்து கலீஃபாவை மூர்ச்சைக்குள்ளாக்கினர். ஹஜ்ரத் இமாம் ஹஸன் ரஜியல்லாஹு அன்ஹு மற்றும் பல நபிமணித்தோழர்கள் வாளேந்தி போர் புரிய முனைந்திட்ட போது, மயக்கத்திலிருந்து எழுந்த கலீஃபா அவர்கள், "புனித நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் துயில் கொள்ளும் புனிதத் திருநகர் மதீனா! இரத்தக்கறையில் மாசு கொள்ளக் கூடாது" என கட்டளையிட்டார்கள். கலகக்காரர்கள் தங்களுக்கு கிடைத்த வாய்ப்புகளை மேலும் பயன்படுத்திக் கொண்டு, அரசாங்க முத்திரையை போலியாக தயார் செய்து, பல குழப்பம் தரும் அரசாங்க கடிதங்களையும், ஆணைகளையும் போலியாக தயார் செய்து அதில் ஆதாரமாக போலி அரசாங்க முத்திரையையும் இட்டு; பாமர மக்களிடையே 3ம் கலீஃபாவின் மீது வெறுப்புணர்ச்சியை உண்டாக்கினர்.

குழப்பம் முற்றி கலீஃபா அவர்களின் இல்லத்தினை சூழ்ந்துக் கொண்ட கலகக்காரர்கள், கலீஃபாவிற்கு உணவும், தண்ணீரும் கூட கிடைக்க முடியாத சூழலை ஏற்படுத்தினர். இமாம் ஹஸன், ஹுஸைன் ரழியல்லாஹு அன்ஹுமா கலீஃபா அவர்களின் இல்ல வாயினில் காவல் காத்துக் கொண்டு இடி தள்ளுபடியில் காயங்களை ஏற்றுக் கொண்டும் இருந்தனர்.

வீட்டினுள் கலீஃபா அவர்கள், நாயிலா அம்மையாரை ( ரழியல்லாஹு அன்ஹா) நோக்கி, "நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களையும் என் தோழர்களான அபூபக்கர், உமர் ரழியல்லாஹு அன்ஹுமா அவர்களையும் நான் கண்டேன், அம்மூவரும் உஸ்மானே ! இன்று உம்முடன் நோன்பு திறக்க, நாங்கள் காத்திருக்கிறோம், விரைந்து வாரும்! எனக் கூறி மறைந்தார்கள். எனவே மிஞ்சியிருக்கும் கொஞ்ச நேரத்தில் நான் திருமறையை ஓதிக் கொள்கிறேன்" எனக் கூறி திருக்குர்ஆனை திறந்து ஓதலானார்கள்.

**மூன்றாம் கலீஃபாவின் ஷஹாதத்...**

கலீஃபா அவர்களின் வீட்டின் பின்புற மேற்கூரையின் வழியாக உள்ளே நுழைந்த நயவஞ்சகர்கள் (முனாஃபிக்குகள்), கலீஃபாவை குறுவாளால் தாக்க, தடுக்க முனைந்த நாயிலா அம்மையாரின் (ரழியல்லாஹு அன்ஹா) நான்கு விரல்களை துண்டித்து கொண்டே கலீஃபாவின் உடம்பில் குறுவாள் இறங்கியது. சிந்திய இரத்தம் ஓதிக்கொண்டிருந்த திருமறையின் மேலே விழ கண்ட கலீஃபா அவர்கள் "ஃபுஸ்த்து பிரப்பில் கஅபா" (கஅபாவின் இறைவனை கொண்டு நான் ஈடேற்றம் பெற்றேன்) என இருமுறை கூறினார்கள்.

"அவர்களைப் பற்றி உங்களுக்கு அல்லாஹ் போதுமானவன்" (2:137) என்ற திருமறையின் சொல்லை உம் இரத்தம் முத்தமிடும் என நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் முன்னறிவித்தபடியே நடந்தேறிய புதினத்தை பார் என நாயிலா அம்மையாரை நோக்கி கூறிக் கொண்டிருக்கும் போதே, மற்றொரு நயவஞ்சகன் (யஹூதி, நஸ்ரானியாக இஸ்லாமிய போர்வைக்குள் இருந்தவன்) கலீஃபாவின் இதயத்தில் ஈட்டியை பாய்க்க, பகலவன் போல் பிரகாசித்த கலீஃபா அவர்களின் திருவதனம் தரையில் சாய்ந்தது! (இன்னாலில்லாஹி வ இன்னா இலைஹி ராஜிஊன்). கலீஃபாவை கொலை செய்தவர்கள், அதற்கு முன்னால் யாருமே பார்த்திராத புதுமுகங்களாகவே இருந்தனர் என்பது நாயிலா அம்மையாரின் (ரழியல்லாஹு அன்ஹா)

வாக்குமூலம் ஆகும்.

கலீஃபா கொல்லப்பட்ட செய்தியறிந்த ஹஜ்ரத் அலீ ரஜியல்லாஹுஅன்ஹு அவர்களின் உடல் சினத்தால் கொதித்தது! “இனி உலக முடிவு நாள் வரை, உங்களுக்கு (கயவர்களுக்கு) அழிவைத் தவிர வேறொன்றுமேயில்லை!” எனச் சபித்தார்கள்.

ஹிஜ்ரி 35ம் ஆண்டு துல்ஹஜ்ஜு மாதம் 18ம் நாள் ஷஹீதான கலீஃபா அவர்களின் மொத்த ஆட்சிக்காலம் ஏறக்குறைய 12 ஆண்டுகள் ஆகும். ஷஹீதாகும் போது கலீஃபா அவர்களுடைய வயது 82 ஆகும்.

நாயிலா அம்மையார் ( ரஜியல்லாஹு அன்ஹா), கலீஃபா அவர்களின் இரத்தக்கறை படிந்த மேலாடையை, தங்களின் வெட்டுண்ட நான்கு விரல்களுடன் சிரியாவில் ஆளுநராக உள்ள ஹஜ்ரத் அமீர் முஆவியா ரஜியல்லாஹு அன்ஹுவிற்கு அனுப்பினார்கள். அதை ஆளுநர், கண்ணீருடன் மக்களுக்கு காட்டி கலீஃபா உஸ்மான் ரஜியல்லாஹு அன்ஹு அவர்களின் கொலைக்கு பழி வாங்கப்பட்டே தீரும் என சபதமேற்றார்கள்.

கலீஃபா அபூபக்கர் ரஜியல்லாஹு அன்ஹு அவர்களால் தேடித்தொகுக்கப்பட்ட திருக்குர்ஆன், கலீஃபா உமர் ஃபாருக் ரஜியல்லாஹு அன்ஹுவால் பாதுகாக்கப்பட்டு, கலீஃபாவின் மகளிடம் (நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் மனைவியான சய்யிதா ஹஃப்ஸா ரஜியல்லாஹு அன்ஹா) அவர்களிடம் ஒப்படைக்கப்பட்டிருந்த முழுத்திருக்குர்ஆன், கலீஃபா உஸ்மான் ரஜியல்லாஹு அன்ஹு அவர்களின் முயற்சியால் - பல திருக்குர்ஆன் பிரதிகள் நகல் எடுக்கப்பட்டது. கூஃபா, டமாஸ்கஸ், மக்கா முகர்ரமா மற்றும் பஸரா போன்ற மாநகரங்களில் உள்ள மக்கள் ஓதுவதற்கும், புரிந்து கொள்வதற்கும் ஏதுவாக ஒவ்வொரு சஹாபிகளின் துணையோடு திருக்குர்ஆன் பிரதி அனுப்பப்பட்டது. திருக்குர்ஆனை தம் நெஞ்சங்களில் முன்னமே தாங்கியிருந்த சஹாபிகள், இப்போது தமது கைகளில் ஏந்திக் கொண்டு; மக்களுக்கு ஓதும் முறையை (தாம் கற்ற அதே முறையை) தெளிவாக கற்றுக் கொடுத்தனர்.

## நான்காம் கலீஃபா
## *ஹஜ்ரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு...*

இறை இல்லமான கஃஅபாதுல்லாவின் உள்ளேயே பிறந்து, நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமையே முதன் முதலாக கண் திறந்துப் பார்த்து, நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் பொறுப்பினிலே 4 வயதிலிருந்து வளர்ந்து வந்த சிறுவர்; தமது 6ம் வயதில் நடந்த சம்பவமான, கதீஜா ரஜியல்லாஹு அன்ஹா அவர்களிடத்தில் **“இறைவன் ஒருவனே”** என்ற ஏகச் சித்தாந்தத்தை பகிரங்கமாக வெளிப்படுத்த எனக்கு உதவுபவர் யார்? என நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கேட்ட சமயத்தில், **“நான் உதவுவேன்”** என இடையில் அச்சிறுவர் கூறியவுடன், மேலும் அச்சிறுவரிடம், அதற்காக உமது குடும்பத்தை முழுவதுமே அல்லாஹ்வின் பாதையில் குர்பானி (தியாகம்) கொடுக்க வேண்டி வருமே? என்ற நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கேட்டதற்கு, **“உங்களுக்காக நான், என்னையும், எனது குடும்பத்தாரையும் இன்னும் எல்லாவற்றையும் குர்பானியாக ஆக்கி கொள்ள சம்மதிக்கிறேன் ”** என அச்சிறுவயதிலே தமது குடும்பத்தின் குர்பானியை அல்லாஹ்-ரஸூலுக்கு கொடுக்க சித்தம் கொண்ட சய்யதினா அலீ அல் ஹைதர் கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்கள், கலீஃபா உஸ்மான் ரஜியல்லாஹு அன்ஹு அவர்களின் கொலைச் செய்தியால் விரக்தி கொண்டு, பொதுமக்களின் சந்திப்பை தவிர்த்து தனிமையில் நாட்களை கழித்துக் கொண்டிருந்தார்கள்.

### கலகக்காரர்கள்...

கலகக்காரர்கள் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுவைச் சந்தித்து அடுத்த கிலாஃபத்தை நீங்கள் ஏற்றுக்கொள்ள (கலகம் செய்கிறவர்கள் -ஹஜ்ரத் அலீயின் ஆதரவாளர்கள் என்ற வேடம் நீடிப்பதற்காக) வேண்டும் என வற்புறுத்தினர். “கலீஃபாவை நியமிப்பது உங்கள் பணியல்ல, அது பத்ரு சஹாபாக்களின் உரிமை” எனக் கூறி கலகக்காரர்களை வழியனுப்பி விட்டார்கள். ஆனால் கலகக்காரர்களோ! பத்ரு சஹாபாக்களையும், மதீனாவாசிகளையும் தேடிப்பிடித்து, தலைமையில்லா சமூகத்தில், உஸ்மான் ரஜியல்லாஹு அன்ஹுவின் கொலைக்கு பழிவாங்கும் தருணத்தில், விபரீதங்கள் நடக்கும் வாய்ப்பு உள்ளது, எனவே தலைமையை (கலீஃபாவை) தேர்வு செய்வது அவசர அவசியம் என மக்களின் மனதில் பயம் கலந்த எண்ணங்களை தோற்றுவித்தனர்.

பிறகு மதீனாவாசிகளும், பத்ரு சஹாபாக்கள் பலரும் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு வை தேடி வந்து, கிலாஃபத்தை ஏற்குமாறு நிர்பந்தித்தார்கள். "தகுதியுடையவர்களல்லவா! தலைமையை ஏற்க வேண்டும்" என அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு கேட்க, "இன்று உங்களை விட தகுதியுடையவர் எங்களில் எவரும் இல்லை! என மக்கள் பதிலளித்தனர். ஹஜ்ரத் தல்ஹா, ஹஜ்ரத் ஜுபைர் (ரஜியல்லாஹு அன்ஹும்) ஆகிய இருவரையும் பார்த்த அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு "நீங்கள் எவரேனும் கிலாஃபத்தை ஏற்றுக் கொள்ளுங்கள், நான் உங்களுக்கு அமைச்சனாக (முன்பிருந்த கலீஃபாக்களுக்கு உதவியது போல) துணை புரிகின்றேன்" என்றார்கள். அதற்கு அவ்விருவரும் உடன்படவில்லை. பின்பு மதீனாவாசிகள் மற்றும் பத்ரு ஸஹாபாக்கள் பலரும் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுவின் கரங்களில் "நீட்டுங்கள் உங்கள் கையை" என்று கூறி பைஅத் (சத்தியப் பிராமணம் செய்தனர். அதனை தொடர்ந்து மக்களின் பலவந்தத்தால் ஹஜ்ரத் தல்ஹா, ஹஜ்ரத் ஜுபைர் (ரஜியல்லாஹு அன்ஹும்) ஆகியோர்அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுவின் கரங்களில் பைஅத் செய்தனர். ஹஜ்ரத் ஸஅத் இப்னு அபீவக்காஸ் ரஜியல்லாஹு அன்ஹு அவர்கள், "என்னைப் பற்றிய எந்தக் கவலையும் கொள்ள வேண்டாம், மக்கள் ஒன்றுப்பட்ட விஷயத்தை நான் ஏற்றுக்கொள்வேன்" என்றவர்களாக தங்கள் இல்லக் கதவை தாழிட்டமர்ந்து விட்டார்கள். இவ்வாறு ஹிஜ்ரி 35ம் ஆண்டு துல்ஹஜ் மாதம் 25ம் நாள், சய்யதினா அலீ முர்தஜா கர்ரமல்லாஹு வஜ்ஹஹு, அல்லாஹ்வின் நாட்டத்தால் இஸ்லாத்தின் 4ம் கலீஃபாவாக தேர்ந்தேடுக்கப்பட்டார்கள்.

## நான்காம் கலீஃபாவின் முதல் ஜும்ஆ குத்பா...

வெள்ளிக்கிழமை தொழுகையை நடத்த வந்த கலீஃபா மக்களிடம், "கண்ணியமும் வல்லமையும் பொருந்திய அல்லாஹ் நமக்கு வழிகாட்டுவதற்கு திருக்குர்ஆனை அருளியுள்ளான். நன்மைகள், தீமைகள் அனைத்தும் அதில் விளக்கப்பட்டுள்ளன. நன்மைகளை ஏற்று தீமைகள் என காட்டப்பட்டவைகளிலிருந்து விலகி நில்லுங்கள். அல்லாஹுதஆலா! உங்கள் மீது விதியாக்கியுள்ளவற்றை நீங்கள் பேணி ஏற்றுக்கொள்ளுங்கள், அதற்கு பலனாக நீங்கள் சொர்க்கத்தை பெறுவீர்கள்."

"இறைவன், புனித இப்பூமியைக் கண்ணியப்படுத்தி விட்டான். ஒரு முஸ்லிமின் உயிரை மற்றப் பொருள்களனைத்தையும் விட விலையுயர்ந்ததாக்கி விட்டான். முஸ்லிம்களை ஒன்றுபட்டு

உதவி வாழ அவன் கடுமையாக எச்சரிக்கின்றான். எவருடைய கரத்தாலும், நாவாலும் பிற முஸ்லிம்கள் நிம்மதி பெறுகிறார்களோ அவரே முஸ்லிமாவார். குற்றத்துக்குப் பகரமாக சட்ட வரம்புக்குட்பட்ட தண்டனையை நிறைவேற்றுவதற்கு அதிகமாக எந்த ஒரு முஸ்லிமையும் துன்புறுத்துவது ஆகுமானதல்ல.”

“பாமரர்களின் பேச்சுக்களை நீங்கள் ஏற்க வேண்டாம். உங்களில் ஒவ்வொருவரும் மரணித்தே ஆக வேண்டியுள்ளது. உங்களுக்கு முன் மரணித்து சென்றவர்கள் படிப்பினை தந்த வண்ணமிருக்கிறார்கள். வாழ்க்கையை எளிமையாக்கிக் கொள்ளுங்கள். தங்களின் மறுமையை வழிபார்த்துக் கொண்டிருப்பவர்களுடன் நீங்கள் சேர்ந்து கொள்ளுங்கள்.”

“நீங்கள் அல்லாஹ்விற்கு அஞ்சிக் கொள்ளுங்கள், மறுமை நாளில் நீங்கள், உங்கள் நிலபுலன்கள் பற்றியும் கால்நடைகளைப் பற்றியும் கூட விசாரிக்கப்படுவீர்கள். அவன் கட்டளைக்கு மாறானதை விட்டு தப்பிக் கொள்ளுங்கள். எண்ணிக்கையில் குறைந்தவர்களாகவும், பூமியின் பரப்பில் பலஹீனர்களாகக் கருதப்பட்ட காலத்தையும் நீங்கள் நினைவு கூருங்கள்!” என உரையாற்றினார்கள்.

கிலாஃபத்தை ஏற்ற மறுதினமே, ஹஜ்ரத் ஜுபைர், ஹஜ்ரத் தல்ஹா மற்றும் பல நபிமணித் தோழர்கள் (ரஜியல்லாஹு அன்ஹும்) புதிய கலீஃபாவை சந்தித்து, தங்கள் நிபந்தனையான முந்திய கலீஃபாவின் கொலைக்கு பழி வாங்க வேண்டும் என அவசரப்படுத்தினார்கள். அதற்கு கலீஃபா அவர்கள், “குழப்பங்கள் ஓயட்டும், நிர்வாகம் நிலை கொள்ளட்டும். அதன்பின் நிச்சயம் நான் கொலையாளிகளைப் பழி தீர்ப்பேன்” என்றார்கள்.

மதீனா நகரில் சூழ்ந்துள்ள கலகக்காரர்களிடையே ஒளிந்திருந்த கொலையாளிகள் பாமர மக்களை கிளர்ச்சியுறச் செய்தனர். இதனால் ஒரு முறை உஸ்மான் ரஜியல்லாஹு அன்ஹுவின் கொலைச் சம்பவத்தை விசாரணைக் குட்படுத்தும் போது 16 ஆயிரம் வாள்கள் உயர்ந்து நின்று, நாங்கள் தான் முந்திய கலீஃபாவை கொன்றோம்! என்ற பயங்கர நிலை மதீனா நகரை போர்த்தியிருந்தது!

குழப்பமும், கலகமும் மக்களை சூழ்ந்திருந்த நிலையில், கலகக்காரர்களை மதீனாவிலிருந்து வெளியேற்றிட கலீஃபா அவர்கள், தமது தலைநகரை மதீனாவிலிருந்து கூஃபாவிற்கும்,

கலகக்காரர்களின் கோரிக்கையின் படி மாகாணங்களின் ஆளுநர்கள் மாற்றத்தையும் ஏற்படுத்த வேண்டியதாயிற்று. மார்க்கத்தையும், மறுமையையும் மட்டுமே பார்த்த கலீஃபாவின் பார்வைக்கு உலக ஆதாயம் கிட்டவில்லை. எனவே உலக ஆதாயத்தை இழந்து விட்டவர்கள், கலீஃபாவிற்கு எதிராகவும் செயல்படலானார்கள்.

ஹஜ்ரத் அமீர் முஆவியா ரஜியல்லாஹு அன்ஹு அவர்கள், புதிய கலீஃபாவான ஹஜ்ரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுவின் கிலாஃபத்தை ஏற்க மறுத்து, கொலையாளிகளை சுதந்திரமாக உலவ விட்டிருப்பதாகவும், கொலையாளிகளை பழி தீர்க்க தம்மிடம் ஒப்படைக்குமாறு காரணம் கூறுவதும்! கலகக்காரர்களுடன் பாமர முஸ்லிம்களும் சேர்ந்திழைக்கும் கொடுமைகள்! இவர்களுடன் நயவஞ்சகர்களான உஸ்மான் ரஜியல்லாஹு அன்ஹுவை கொலை செய்தவர்கள்! போலிகளை புரிந்து கொள்ள இயலாத முஸ்லிம் மக்களின் மனநிலை! கொலையாளிகளை தவிர்த்து மற்ற பாமர முஸ்லிம்களுக்கு அநீதியிழைக்க முடியாதபடி கலீஃபாவின் இஸ்லாமிய மார்க்க ஆட்சி- நிர்வாகத்தை நிலைப்படுத்த - முறைப்படுத்த போதிய நம்பிக்கைக்குரியவர்கள் இன்னும் ஒன்றுபடாத குறை போன்றவைகள், இன்னும் கலீஃபாவிற்கு சோதனைகளை அதிகரிக்கவே செய்தது.

## அன்றைய குழப்பவாதிகளின் நயவஞ்சகம்...

நயவஞ்சகர்களான இப்னு ஸபா, உஷ்த்தர், இப்னு ஸஅலபா, ஸரீஹ் போன்றவர்கள் கூடி ஆலோசித்து, பிரிந்துள்ள இஸ்லாமிய தலைவர்களை எந்த நேரத்திலும் எவ்விதத்திலும் ஒன்று சேர விடாது தடுப்பதற்கு ஒரே வழி; பலவந்தமாக அவர்கள் நம்மை பிரித்து விட்டாலும், நாம் விலகி விடக் கூடாது. அவர்களையே நெருங்கியே செல்ல வேண்டும். எக்காரணம் கொண்டும் போர் முஸ்லிம்களிடையே ஏற்படுவதற்கு எல்லா வகையான வழிகளையும் நாம் செய்ய வேண்டும் என தமது சீடர்களுக்கு கட்டளைகளை பிறப்பித்தனர்.

ஹஜ்ரத் ஜுபைர், ஹஜ்ரத் தல்ஹா ரஜியல்லாஹு அன்ஹும் மற்றும் அன்னை ஆயிஷா ரஜியல்லாஹு அன்ஹா ஆகியோர்களின் கூட்டணி, ஹஜ்ரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்களை முந்திய கலீஃபாவின் கொலைக்கு பழி தீர்ப்பதற்காக பஸரா என்ற இடத்தில் சந்தித்த போது, ரஸுலல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்கள் முன்னறிவித்த

எச்சரிக்கைகளை நினைவூட்டி ஹஜ்ரத் ஜுபைர், ஹஜ்ரத் தல்ஹா ரஜியல்லாஹு அன்ஹும் மற்றும் அன்னை ஆயிஷா ரஜியல்லாஹு அன்ஹா ஆகியோரை சமாதான வழிக்கு அழைப்பு விடுத்து அமைதியான சூழலை ஏற்படுத்த முயற்சி கொண்டிருக்கும் போது, இரு புறங்களிலும் எதிரெதிரே அமைந்திருந்த கூடாரங்களில் புகுந்த நயவஞ்சகர்கள், சற்றே யாரும் எதிர்பாரா விதமாக தாக்க ஆரம்பித்து படுகொலைகளை செய்தனர். இரு பிரிவினர்களும் தத்தமது பாதுகாப்பிற்காக வேண்டி போரில் குதித்து, முதன் முறையாக முஸ்லிம்கள் முஸ்லிம்களை தாக்க ஆரம்பித்தனர். இறுதியில் ஹஜ்ரத் ஜுபைர், ஹஜ்ரத் தல்ஹா ரஜியல்லாஹு அன்ஹும் ஆகியோரை நயவஞ்சகர்கள் கொலை செய்தனர். ஆயிஷா அம்மாவை (ரஜியல்லாஹு அன்ஹா) நயவஞ்சகர்கள் நெருங்கும் போது, கலீஃபா அவர்கள் துரிதமாக செயல்பட்டு அன்னையை மீட்டு பாதுகாப்பாக மதீனாவிற்கு அனுப்பி வைத்தார்கள்.

ஹஜ்ரத் அபூபக்கர், ஹஜ்ரத் உமர், ஹஜ்ரத் உஸ்மான் (ரஜியல்லாஹு அன்ஹும்) ஆகியோரை எந்த முஹாஜிர்களும் அன்ஸார்களும் தேர்ந்தெடுத்தார்களோ, அந்த மேன்மக்களே என்னையும் கலீஃபாவாக தேர்ந்தெடுத்துள்ளனர். எனவே விசுவாச பிரமாணம் செய்து தருவது அவசியம் என கருதி ஹஜ்ரத் அமீர் முஆவியா ரஜியல்லாஹு அன்ஹுவை கட்டுப்படுத்த தம் படையுடன் சென்ற கலீஃபா அவர்கள் ஸிப்ஃபீன் என்ற இடத்தில் நான்கு மாதம் காத்திருந்து சமாதானம் ஏற்பட வழி செய்து கொண்டிருக்கும் போதும், ஹஜ்ரத் அலீயின் ஆதரவாளர்கள் மாதிரி நடித்துக் கொண்டு, கலகம் விளைவித்த அப்துல்லா இப்னு ஸபாவின் ஆட்கள் போலவே, ஹஜ்ரத் அமீர் முஆவியாவின் கட்சியில் நுழைந்துக் கொண்ட ஓர் அக்கிர கும்பல் ஸாதாத்மார்களான அஹ்லே பைத்துகள் ( நபியின் குடும்பத்தார்) மீது வெறுக்கதக்க ஓர் துவேஷ உணர்வை கிளறி விட்டிருந்தார்கள். ஹஜ்ரத் அலீ, ஹஜ்ரத் அமீர் முஆவியா (ரஜியல்லாஹு அன்ஹும்) போன்ற இரு பெரும் முஸ்லிம் தலைவர்களின் இடைப்பட்ட பிரச்சினையை தங்களுக்கு (நயவஞ்சகர்கள் )சாதகமாக பயன்படுத்திக் கொண்டார்கள்.

### காரிஜியாக்கள் கூட்டம்...

ஒரு சில கூட்டத்தார்கள் ஆரம்பத்தில் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுவையே தங்களின் கலீஃபாவாக ஏற்றுக்கொண்டனர். ஆனால் ஒரு சில சூழ்நிலையில், ஹஜ்ரத் அமீர் முஆவியா

ரஜியல்லாஹு அன்ஹு மற்றும் அவர்களின் கூட்டத்தினரிடையே கலீஃபா அவர்கள் மென்மையை மேற்கொள்வதும், திருக்குர்ஆனுடைய சட்ட வரம்புகளில் நடுவர்களின் கருத்தை கேட்பதுமான செயல்களை பாவமாகும் என கருதி ஹஜ்ரத் அலீ, அமீர் முஆவியா, அம்ர் இப்னு ஆஸ் (ரஜியல்லாஹு அன்ஹும்) ஆகிய மூவரையும், தங்களது ஷைத்தானிய அறிவைக் கொண்டு காஃபிர்கள் - நிராகரிப்பவர்கள் என தூற்றினார்கள். இன்னும் இம்மூவரையும் மதிக்கும் சாதரண அப்பாவி மக்களையும் பார்த்த இடத்திலேயே கொலை செய்யவும், துன்புறுத்தவும் செய்தனர். எனவே நிலைமையை சமாளிப்பதற்காக ஹஜ்ரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு, நயவஞ்சகர்களில் ஒரு பிரிவிரரான காரீஜியாக்கள் மீது போர்த்தொடுத்து இஸ்லாமிய மார்க்கத்தை காப்பாற்றினார்கள்.

## விஷ வாளால் நான்காம் கலீஃபாவின் ஷஹாதத்...

நஹ்ரவான் போர்க்களத்தில் காரீஜியாக்களுடன் நடந்தப் போரில், வெற்றி வாகையை ஹஜ்ரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு சூடியிருந்த போதிலும், போரின் சமயம் சில காரீஜியீன்கள் உயிர்பிழைப்பதற்காக தப்பியோடி விட்டனர். அவர்களுள் அம்ர் இப்னு பக்ரி தமீமி, பரக் இப்னு அப்துல்லாஹ் தமீமி, அப்துர் ரஹ்மான் இப்னு முல்ஜிம் முராதீ ஆகிய மூவரும் ஒரே நாளில் ஒரே நேரத்தில் (ஃபஜ்ர் தொழுகை), முறையே ஹஜ்ரத் அம்ர் இப்னு ஆஸ், ஹஜ்ரத் அமீர் முஆவியா, ஹஜ்ரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு ஆகிய மூவரையும் கொலை செய்ய திட்டமிட்டனர். திட்டமிட்டபடியே ஹிஜ்ரி 40ம் ஆண்டு ரம்ஜான் மாதம் 17ல் (வெள்ளிக்கிழமை) ஃபஜ்ரு தொழுகையை நடத்துவதற்காக கூஃபா பள்ளிவாசலினுள் நுழைந்த கலீஃபா அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுவை மறைந்திருந்து, 40 நாள் விஷத்தில் ஊற வைத்திருந்த வாளால் தாக்கினார்கள். இக்கொடிய வேலையை அப்துர் ரஹ்மான் இப்னு முல்ஜிம் முராதீயும் அவனுக்குதவியாக ஹபீப் என்பவனும் செய்தனர். மற்ற இரு சஹாபாக்களையும் கொல்ல சென்றவர்கள் தமது திட்டங்களை நிறைவேற்றுவதில் ஏமாற்றமடைந்திருந்தனர்.

“கஅபாவின் இறைவனால் ஈடேற்றம் பெற்றேன்” என புகழ்ந்தவாறே கலீஃபா அவர்கள் தரையில் சாய்ந்தார்கள். அப்துர் ரஹ்மான் இப்னு முல்ஜிம் முராதீயும் பிடிபட்டான். தமது 63 வது வயதை கடத்திக் கொண்டிருந்த கலீஃபா, விஷத்தின் வீரியத்தினால் 3 நாட்கள் வலியை தாங்கிக் கொண்டவர்களாக, ரஸூலல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் முன்னறிவிப்பின் படி

உமது மரணம் கொலையாலே நிகழும் என்ற உண்மை நடந்தேறியதை கண்டு மனம் பூரிப்படைந்தவர்களாக, உலக வாழ்க்கையிலிருந்து மறைந்து வாழ ஆரம்பித்தார்கள். கலீஃபா அவர்களின் உத்திரவுப்படி அவரது பொன்னுடலை ஓர் குதிரையின் மேல் ஏற்றி ஒரு குறிப்பிட்ட மலையை நோக்கி செல்ல விட்டு இமாம் ஹஸன், ஹுஸைன், இப்னு ஹனஃபிய்யா (ரஜியல்லாஹு அன்ஹும்) ஆகியோர் திரும்பிவிட்டனர். மாநபித் தோழர்களில் பலரின் பொன்னுடல் விண்ணின் பால் உயர்த்தப்பட்டது போல், கலீஃபா அலீ கர்ரமல்லாஹு வஜ்ஜஹுவின் பொன்னுடலும் மாயமாய் மறைந்தது என்பது ஓர் ரிவாயத்து.

## பகைவரின் பாராட்டு...

கலீஃபா அலீ கர்ரமல்லாஹு வஜ்ஜஹுவின் மரணச் செய்தி கேட்டு ஹஜ்ரத் அமீர் முஆவியா ரஜியல்லாஹு அன்ஹு அவர்களும் அழுதார்கள். "அவர் வாழ்ந்தபோதேல்லாம் அவரை எதிர்த்துப் போர் நடத்திய தாங்கள் இப்போது அழுத் தேவை என்ன?" எனக் கேட்ட தம் மனைவியிடம், "அபூதாலிபின் அந்த மகனின் மரணத்தோடு எத்தகைய மேதையும் மாண்பும் உலகை விட்டுப் பிரிந்தன என்பதை நீ அறியமாட்டாய்!" என்றும், "நிச்சயமாக அலீ அவர்கள் என்னைக் காட்டிலும் சிறந்தவரே! - உயர்ந்தவரே!" எனக் கூறினார்கள்.

"நான் ஞானத்தின் பட்டணமாக இருக்கின்றேன்; அலீ அதன் நுழை வாயிலாக இருக்கிறார்கள்." என்ற ரஸுலல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் வாக்கின் படி மாரிஃபாத் என்னும் மறைவான ஞானங்களின் கருவூலமாகவும், ஆன்மீக ஞானத்தின் ஊற்றுக் கண்ணாகவும் விளங்கும் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஜஹு அவர்கள், நீதி, நேர்மை, தக்வா (பயபக்தி), அன்பு ஆகியவற்றை நிலைநிறுத்தி கிலாஃபத்தின் சுமையை தாங்கியது 4 வருடங்கள் 8 மாதங்கள் 9 நாட்கள் ஆகும்.

மரணத்தருவாயில் கலீஃபா அவர்கள், தமது மக்களாகிய இமாம் ஹஸன், இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹும் அவர்களை நோக்கி "அல்லாஹ்வின் அச்சத்தைக் கொண்டு உங்களுக்கு நான் நினைவூட்டுகிறேன். உலக ஆதாய இன்பங்களைத் தேடி நீங்கள் அலையாதீர்கள். உலகம் உங்களைத் தேடி வேண்டுமானால் வரட்டும். உங்கள் கைகளிலிருந்து விட்டுப்போகும் இன்பங்களைப் பற்றி நீங்கள் கவலைக் கொள்ள வேண்டாம். சத்தியத்தின் மீது எப்போதும் உறுதியாய் இருங்கள். அநியாயக்

காரர்களுக்கு எதிரிகளாக இருங்கள். அநீதி இழைக்கப்பட்ட வர்களுக்கு உதவுபவர்களாக இருங்கள். திருக்குர்ஆனின் மீதே உங்கள் வாழ்க்கையை அமைத்துக் கொள்ளுங்கள். அல்லாஹ்வின் பாதையில் போராடுவதில், உங்கள் உயிரையும் பொருளையும் அர்ப்பணித்து கொண்டேயிருங்கள். அல்லாஹ்வினுடைய சட்டத்தில் எவருடைய குறுக்கீட்டையும் பொருட்படுத்தாதீர்கள். அல்லாஹ் உங்களை காத்துக் கொள்வான்.” என்று போதித்தார்கள்.

கலீஃபா அவர்களின் மரணத் தருணத்தில் ஜன்தப் இப்னு அப்துல்லாஹ் என்பவரும் மற்றத் தோழர்களும், “நாங்கள் உங்களை இழந்து விட்டோமாயின், ஹஜ்ரத் இமாம் ஹஸன் ரஜியல்லாஹு அன்ஹு அவர்களிடம் பைஅத் (சத்தியப்பிரமாணம்) செய்யலாமா?” எனக் கேட்டதற்கு, கலீஃபா அவர்கள், “இதைப் பற்றி உங்களுக்கு நான் கட்டளையிடவுமில்லை. உங்களை இதனின்று தடுக்கவுமில்லை.... நீங்களே முடிவு செய்து கொள்ளுங்கள்!” எனக் கூறினார்கள்.

## ஐந்தாம் கலீஃபாவாக கருதப்பட்டவர்...

எட்டு வயது வரை தமது பாட்டனாரான ஈருலகத்தின் நாயகர், நபிகள் நாயகம் முஹம்மதுர் ரஸூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் மடியிலும் தோளிலும் தவழ்ந்தவரும்; நடை, உடை, பாவனைகளில் நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமை போல் தோற்றமளிப்பவரும்; சொர்க்கத்து இரு தூண்களில் ஒருவரான ஹஜ்ரத் இமாம் ஹஸன் ரஜியல்லாஹு அன்ஹு அவர்களையே தங்களின் 5ம் கலீஃபாவாக ஏற்றுக் கொண்டு, கூஃபா நகரில் வாழ்ந்த முஸ்லிம் பெருமக்களால் நீட்டுங்கள் உங்கள் கரத்தை என்று "பைஅத்"(சத்தியப்பிரமாணம்) செய்து கொடுக்கப்பட்டு கலீஃபா என்னும் நேரிய ஆட்சி பொறுப்பு இமாமவர்களின் கையில் ஒப்படைக்கப்பட்டது.

### இமாம் ஹஸன் அவர்களின் குத்பா – பிரசங்கம்...

ஐந்தாம் கலீஃபாவான இமாம் ஹஸன் ரஜியல்லாஹு அன்ஹு அவர்கள் மக்களை நோக்கி, "சகோதரர்களே! உங்களிடையே சகோதரராய் வாழ்ந்து, உங்களின் தலைவராய் உங்களை வழி நடத்திச் சென்ற எம் தந்தை அலீ கர்ரமல்லாஹு வஜ்ஜஹு அவர்கள் பல சிறப்புகளை பெற்றவர்கள். நபிகளார் ஸல்லல்லாஹு அலைஹி வ ஸல்லமவர்களின் கட்டளையை ஏற்று அவர் படை நடத்தி செல்லும் போது, ஹஜ்ரத் ஜிப்ரயீல் அலைஹிஸ் ஸலாம் தந்தையின் வலப்பக்கத்திலும், ஹஜ்ரத் மீகாயில் அலைஹிஸ் ஸலாம் தந்தையின் இடப்பக்கத்திலும் இருந்தவாறே அல்லாஹ் அவர்களுக்கு வெற்றியை அளித்தான்.

நபிகள் நாயகம் எம் தந்தையைப் பற்றி குறிப்பிடும் போது, "அலீயே! மறுமை நாளில் உம்மை போன்று சிறப்புடையவர்கள் யாரும் கிடையாது. இறை நம்பிக்கையுள்ள மூமின்கள் அனைவரிலும் நீரே முதன்மையானவர்! எல்லா அடியார்களை காட்டிலும் நீரே அதிக அன்புள்ளவராக இருக்கிறீர். அல்லாஹ்வின் கட்டளைகளையும், அவனிடம் செய்த வாக்குறுதிகளை நிறைவேற்றுவதிலும் நீரே முதன்மையாக இருக்கிறீர். பங்கீடு செய்வதில் யாவரையும் விட நீரே சிறந்தவர். கியாமத் நாளில் எல்லோரைக் காட்டிலும் நீரே உயர் பதவி பெற்றிருப்பீர்!" என அருளியுள்ளார்கள்.

ஆனால் எம் தந்தையை பற்றி இந்த மக்களில் சில பிரிவினர்கள் என்ன நினைத்தார்கள்? நீதி, நியாயம் தவறியவராக கருதவில்லையா? குற்றச்சாட்டுக்கு மேல் குற்றச்சாட்டை அள்ளி வீசி, இறுதியில் எம் தந்தையின் உயிருக்கே உலை வைத்து விட்டார்களே! எம் தந்தையின் நற்குணத்தைப் பற்றி முந்தைய கலீஃபாக்கள் யாரேனும் குறை கூறியதுண்டா? அவர்களை உயர்வுப்படுத்தியே அந்த நன்மக்கள் பேசியுள்ளனர்.

உங்களுக்கு ஒன்றைக் கூறிக் கொள்கிறேன்; காலங்களில் மிகக் கெட்டது, பெருமக்களை (இறை நேசர்களை) இம்சிப்பதும், அவர்கள் மீது களங்கம் கற்பித்துப் பேசுவதும் தான்! நன்மைகள் மறைந்து கொண்டு வரும் போது தான் இப்படி நடக்கும். நல்லோர்கள் ஒதுக்கப்பட்டு தீயோர்கள் முன்னிலைக்கு வரும் கட்டத்தில் தான் இவ்விதம் நடக்கும். துர்நாற்றம் மிகைக்கும் படி செய்து விடாதீர்கள். அப்புறம் நறுமணத்தின் இனிமையை நீங்கள் அனுபவிக்கவே முடியாது” என்றார்கள்.

இரண்டாம் கலீஃபாவான ஹஜ்ரத் உமர் ரஜியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு, நபியின் பேரரான இமாம் ஹஸன் ரஜியல்லாஹு அன்ஹு மீது ஒரு தனிப்பிரியம் உண்டு. நாயகத் தோழர்களுக்கு உபகாரச் சம்பளம் வழங்கப்பட்ட அடிப்படையில் இமாம் அவர்களுக்கும் மாதம் 5000 திர்ஹங்கள் கொடுக்கப்பட்டது. இது இமாம் அவர்கள் கலீஃபா ஆகும் வரை நீடித்தது. தமக்கு வந்ததை ஏழை, எளியவருக்கு வாரி வழங்கிவிட்டு தம் தந்தை - பாட்டனாரைப் போல மிக எளிமையாக வாழ்ந்தார்கள். இமாம் அவர்கள் ஒரு முறை ஒரு பொருளை வாங்கும் போது பேரம் பேசி சரியான விலைக்கொடுத்து வாங்கும் போது வியாபாரி இமாமை நோக்கி, “மற்றவர்களுக்கு கொடையாக வாரி வழங்கும் நீங்கள் இந்தப் பொருளுக்கு சற்று அதிக விலை கொடுத்து வாங்கினால் என்ன?” என்றதற்கு “இமாமவர்கள் அது மற்றவர்களுக்காக நான் கொடுப்பது, இது என் தேவைக்காக வாங்கும் போது சிக்கனத்தை கடைபிடிப்பது” என்று எளிமையாக பதிலளித்தார்கள்.

கவிதை இயற்றுவதிலும் சொற்பொழிவாற்றுவதிலும் சிறந்து விளங்கிய இமாமவர்கள் மக்களுக்கு ஞான உபதேசங்களை வழங்கிக் கொண்டு இருந்தார்கள். உதாரணமாக, “தகுதியற்றவனிடம் ஒரு காரியத்தை கொண்டு போவதை விட அந்தக் காரியம் நிறைவேறாமல் இருப்பதே மேல்!” என்றார்கள். ஒரு முறை ஹஜ்ரத் அமீர் முஆவியா ரஜியல்லாஹு அன்ஹு அவர்கள் இமாமை அணுகி தன்மை, கொடை, வீரம் ஆகியவற்றிற்கு விளக்கம் தருமாறு

கேட்டார்கள்.

**தன்மை:** மார்க்க விஷயங்களில் சீர்திருத்தி கொள்வதில், தன் பொருளை நியாயமாய் பயன்படுத்துவதில், முஸ்லிம்களிடையே அதிகமாய் சலாம் கூறிக்கொள்வதில், மனிதர்களிடம் அன்பையும், மதிப்பையும் பெறுவதில் இருக்கிறது!

**கொடை:** யாசிப்பதற்கு முன்னரே எளியவருக்கு ஈவதில், நற்குணத்துடனும் நல்லொழுக்கத்துடன் திகழ்தலில், சரியான நேரத்தில் பசியையும், தாகத்தையும் தீர்ப்பதில் இருக்கிறது!

**வீரம்:** தன்னைச் சார்ந்துள்ளோருக்கு பாதுகாப்பு ஏற்பாடுகளை செய்வதில், சிரமமான நேரங்களில் அவர்களுக்கு சரியான உதவி செய்வதில், சங்கடங்களும், கஷ்டங்களும் நேரும் போது மனம் தளராது சகிப்புத்தன்மையுடன் இருப்பதில் இருக்கிறது! என தெளிவாக இமாமிடமிருந்து பதில் பெற்ற ஹஜ்ரத் அமீர் முஆவியா ரஜியல்லாஹு அன்ஹு அவர்கள் மேலும் பல விஷயங்களில் இமாமிடம் தெளிவுப் பெற்று வந்தார்கள்.

ஞான ஜோதியான 5ம் கலீஃபா அவர்களுக்கு கூஃபா மக்களிடையே காணப்பட்ட ஒற்றுமையின்மை, பல்வேறு பிரிவுகளாகி உண்மையை உணராத மக்களின் மனோபாவம், 3ம் கலீஃபாவின் கொலைக்கு காரணம் ஹஜ்ரத் அலீயும் அவர்களது குடும்பமே! (ரஜியல்லாஹு அன்ஹும்) என்ற மாயத்தோற்றம், நபியின் குடும்பத்தாருக்கு மட்டும் ஏன் இந்த தனிச் சிறப்பு? என்ற காழ்ப்புணர்ச்சி கொண்ட பாவிகளின் கூட்டம் போன்றவைகள் மேலும் பல பிரச்சினைகளையும் குழப்பங்களையும் தந்து கொண்டிருந்தன...! இதற்கிடையில் ஹஜ்ரத் அமீர் முஆவியா ரஜியல்லாஹு அன்ஹு அவர்களும் முந்தைய கலீஃபாவிற்கு பைஅத் செய்து கொடுக்க மறுத்தது போல் இமாம் ஹஸன் ரஜியல்லாஹு அன்ஹு அவர்களுக்கும் பைஅத் செய்து கொடுக்க மறுத்து போர்நிறுத்தம் பற்றிய தூது ஒன்றையும் அனுப்பியிருந்தார்கள்.

## சமாதானத் தூதுவர் ஹஜ்ரத் இமாம் ஹஸன்...

இப்போது இமாம் ஹஸன் ரஜியல்லாஹு அன்ஹு, கிலாஃபத் என்ற சுமையை தாங்கி 6 மாதங்கள் சில நாட்கள் ஆன நிலையில், “என்னுடைய மறைவிற்கு பின் கிலாஃபத் என்னும் நேரிய ஆட்சி 30 ஆண்டுகள் மட்டுமே தொடரும்” மற்றும் “ஹஸன்

இரண்டு பெரும் கூட்டத்தினரின் சமாதானத்திற்கு காரணமாக இருப்பார்" என்ற ரஸுலல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் முன்னறிவிப்புகள் தமது ஞாபகத்திற்கு வந்த நிலையில், தமது 6 மாத சில நாட்கள் ஆட்சியோடு நாயகமவர்கள் அறிவித்த 30 ஆண்டுகள் முடிவடிந்ததை அடுத்து, எதைப்பற்றியும் கவலைப்படாமல், எந்த பெரும் தலைவரும் செய்ய முடியாத அளவுக்கு தாராளமாய் தம்முடைய கலீஃபா பதவியை துறந்து விட்டு, மக்கள் தட்டிக் கேட்க ஆளில்லாத அரசராகவும் ஆவதற்கு மனமில்லாமல் ஓர் உடன்படிக்கைக்கு (Agreement) வந்தார்கள்.

அவ்வுடன்பாட்டின் படி, 1. திருக்குர்ஆன், நபிகள் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் நடைமுறை மற்றும் குலஃபாயே ராஷிதீன்களுடைய நடைமுறை இவற்றிற்கு விரோதமாக அமீர் முஆவியா ரஜியல்லாஹு அன்ஹு அவர்கள் மக்களின் மீது ஆதிக்கம் செலுத்தக் கூடாது. 2. தமக்கு பின் அதிகாரத்திற்கு வரக்கூடியவர் என முன்கூட்டியே தமக்கு பிரியமானவரை தேர்ந்தெடுத்துக் கொள்ள கூடாது. 3. ஷாம் தேசத்தாரையோ, இராக் தேசத்தாரையோ, ஹிஜாஸ் தேசத்தாரையோ அல்லது இப்பூமியில் வசிக்கிற யாரோ ஒரு முஸ்லிமை தங்கள் தலைவராக தேர்ந்தெடுத்துக் கொள்ளக் கூடிய உரிமை முஸ்லிம் பெருங்குடி மக்களுக்கே உண்டு. 4. தங்கள் உயிர், பொருள், வம்சம் ஆகியவற்றை பாதுகாத்துக் கொள்ளவும், தமக்கு விருப்பப்பட்டவரை இமாமாக நியமித்துக் கொள்ள அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்களின் சந்ததியினருக்கு எப்பொழுதுமே உரிமை உண்டு. என்றபடி மக்களாட்சி தத்துவத்தையும் இமாமவர்கள் அவசியப்படுத்தினார்கள்.

## ஹஜ்ரத் இமாம் ஹஸனின் ஷஹாதத்...

மார்க்க கல்வியிலும், அகமிய ஞானத்திலும் பேரொளி ஜோதியாய் இருந்த இமாமவர்கள், புனித மதீனாவில் அமைதியாக தம் குடும்பத்துடன் எளிமையாய் வாழ்க்கையை நடத்திக் கொண்டிருந்தார்கள். ஆனால் ரஸுலல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் அமானித ஜோதியை தன்னில் கொண்டிருந்த இமாம் ஹஸன் ரஜியல்லாஹு அன்ஹுவை கொலை செய்ய துடித்த நயவஞ்சகர்கள் அவரை பின் தொடர்ந்த வண்ணமேயிருந்தனர். ஒரு நம்பிக்கைக்குரிய கையால் விஷம் ஊட்டப்பட்ட இமாமவர்களின் ஈரல் துண்டுதுண்டாய் வாந்தி மூலம் வெளிப்பட்டது, இந்தக் கொடுமை 3 நாட்கள் வரை தொடர்ந்தது, ஹிஜ்ரி 50ம் வருடம் ஸஃபர் மாதம் 29ம் நாள்

தன்னுடைய 48வது வயதில் இமாமவர்கள் ஷஹீதானார்கள். (இன்னா லில்லாஹி வ இன்னா இலைஹி ராஜிஊன்)

இமாமவர்கள் தமக்கு விஷமூட்டிய துரோகிகளை கடைசி வரை இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு அவர்களிடம் தெரிவிக்க மறுத்துவிட்டார்கள். காரணம், தம்மை கொன்றவர்களை தண்டிக்க அல்லாஹ் போதுமானவன் என்றும். குற்றவாளி சரியாக தெரியாத பட்சத்தில், ஒரு நிரபராதி தண்டிக்கப்பட, தாம் காரணமாகி விடக் கூடாது! என்ற இறையச்ச (தக்வா) உணர்வினை அந்த இறைநேசர் கொண்டிருந்ததேயாகும். ஆனால் வரலாற்றாசிரியர்கள் - இமாம் ஹஸன் ரஜியல்லாஹு அன்ஹு விஷத்தை கொண்டு ஷஹீதாக்கப்பட்டது கூட, கொடியவன் யஜீதுவின் ஏற்பாட்டில் நடந்தது தான்! என்கிறார்கள்.

## கொடியவன் யஜீது

ஹிஜ்ரி 60ம் வருடம் ஹஜ்ரத் அமீர் முஆவியா ரஜியல்லாஹு அன்ஹு அவர்கள் மறைந்தார்கள். நல்லவர்களையெல்லாம் இழந்து விட்ட கூஃபா நகரம், நயவஞ்சக யஹூதிகளுக்கும், நஸ்ரானிகளுக்கும் தமது வேலைகளை முடிப்பதற்கு நல்ல வகையில் கை கொடுத்தது. மீதியிருக்கக் கூடிய அப்பாவி முஸ்லிம்களையும் தமது சூழ்ச்சிகர வலையில் விழ வைப்பதற்கு மது, மங்கை, செல்வம் போன்ற போதைகளை உலகத்தை விரும்பும் அற்பர்களுக்கும் கொடுத்து தங்களுக்கு தேவையான காரியங்களை முடிப்பதற்கு நயவஞ்சகர்கள் தவறவில்லை. ஹஜ்ரத் அமீர் முஆவியாவின் (ரஜியல்லாஹு அன்ஹு) இறுதி காலத்திலேயே கூஃபா மக்கள் பகட்டான பட்டோப வாழ்க்கைக்கு மதி மயங்கியிருந்தார்கள் என்பது வரலாற்றாசிரியர்களின் கருத்தாகும்.

ஹஜ்ரத் அமீர் முஆவியா ரஜியல்லாஹு அன்ஹு தமது மகனான யஜீதை அழைத்து தமது இறுதிகால அறிவுரைகளை வழங்கினார்கள். அதில் – "இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு அவர்களை கண்ணியப்படுத்துகிற விஷயத்தில் பிழை செய்து விடதே. உண்மையில் இந்த கிலாஃபத் பதவி அவர்களது உரிமையே! நாம் யாவரும் அவர்களது தொண்டர்களே! என்பதை மறந்து விடதே! அஹ்லுல் பைத்துகளை (நபியின் குடும்பத்தாரை) விட உன் குடும்பத்தாரை அதிக கண்ணியப்படுத்தி விடாதே! எக்காரியத்திலும் இமாமவர்களின் ஆலோசனை இல்லாமல் செயற்படாதே! ஹாஷிம் கிளையாரை அணைத்து நடந்துக் கொள்! இதன்படி நடந்து கொள்வாயானால் உலக வெற்றி மாத்திரமல்ல; மறுமை நற்பேற்றையும் பெறுவாய்" எனக் கூறியிருந்தார்கள்.

### சண்டாளன் யஜீது ஷைத்தானாக...

ஆனால் யஜீதோ! காஃபிர்களை காட்டிலும் மோசமான முனாஃபிக்காகவே (நயவஞ்சகனாகவே) இருந்தான். மது அருந்துவது - போதையுடனே எப்போதும் இருப்பது, விபச்சாரத்தில் ஈடுபடுவது, நடன நாட்டிய மங்கைகளை தம் பக்கத்திலேயே வைத்துக் கொள்வது, இன்னும் ஏராளமான எல்லாப் பாவங்களிலிருந்தும் தப்பாமல் இருந்தான். இப்பேற்பட்ட கொடியவனுக்கு இஸ்லாமிய மார்க்கமும் தெரியாது, அஹ்லுல் பைத்துகளின் மதிப்பும் - கண்ணியமும் தெரியாது! இன்னும் ஹஜ்ரத் அமீர் முஆவியா

ரளியல்லாஹு அன்ஹுவின் மரணத்தில் யஸீதிற்கும் பங்குண்டு என்கிறார்கள் வரலாற்றாசிரியர்கள்.

ஆதம் அலைஹிஸலாமுக்கு முன் பாம்பாக தோன்றி சதி செய்த ஷைத்தான், இப்ராஹீம் அலைஹிஸலாம் காலத்தில் நம்ரூத்தாகவும், மூஸா அலைஹிஸலாம் காலத்தில் ஃபிர்அவ்ன் ஆகவும் வெளிப்பட்டு தொல்லைகளை கொடுத்தான். முஹம்மத் முஸ்தஃபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் காலத்தில் அபூஜஹலாகவும், அபூலஹபாகவும் வந்து தொல்லைகளை கொடுத்து வந்தவன்; இப்போது இமாம் ஹுஸைன் ரளியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு, யஸீதாக வந்து தனது வேலையை ஆரம்பித்தான் என்பது சூஃபியாக்களின் கருத்தாகும்.

**தேளின் விஷம் கொண்டவன் யஸீது...**

ஹஜ்ரத் அமீர் முஆவியா ரளியல்லாஹு அன்ஹு தனது இளமை பருவத்தின் நீண்ட காலம் வரை திருமணம் செய்து கொள்ளாமலேயே இருந்தார்கள். ஒரு முறை மஸ்ஜிதில் இதிகாஃப் இருக்கும் சமயம், கொடிய தேள் ஒன்று கடித்துவிட்டது. வலியின் கொடுமை தாங்க முடியாமல் நீண்ட நாட்களாகவே அவதிப்பட்டு வந்தவர்கள், திருமணம் செய்து இல்லறத்தில் ஈடுபட்டால் இக்கொடுமை தணிய வாய்ப்புண்டு என்ற மருத்துவர்களின் ஆலோசனைக்குட்பட்டு கொண்டதன் காரணமாகவே அந்தக் கொடிய தேளின் கொடிய விஷமாகவே யஸீது பிறந்தான் என இஸ்லாமிய பெரியோர்களால் கூறப்படுகிறது.

ஹஜ்ரத் அமீர் முஆவியா ரளியல்லாஹு அன்ஹுவின் மரணத்தை அடுத்து, யஸீது தம்மை தாமே கலீஃபாவாக அறிவித்துக் கொண்டான். ஏற்கனவே தமக்கென விசுவாசிகளையும், படைகளையும் தயார்படுத்தி வைத்ததன் காரணமாக மக்களை மிரட்டி, அடக்கி ஒடுக்கினான். ஹிஜாஸ், இராக், ஷாம் தேசங்களும் தமது கட்டுப்பாட்டிற்குள் வந்து விட எண்ணி இமாம் ஹுஸைன் ரளியல்லாஹு அன்ஹு அவர்களுக்கும், ஹஜ்ரத் உமரின் புதல்வர் அப்துல்லாஹ், ஹஜ்ரத் ஜுபைரின் புதல்வர் அப்துல்லாஹ் (ரளியல்லாஹு அன்ஹும்) ஆகியவர்கள் கட்டாயமாக தன்னை கலீஃபாவாக ஏற்று பைஅத் செய்து தர வேண்டும். அதன் பின் மதீனாவாசிகளை அந்நிலைக்கு கொண்டுவர வேண்டும். இவ்வுத்தரவுக்கு மாறுதலாக எதுவும் இருக்க கூடாது என மதீனாவின் கவர்னர் வலீதுவுக்கு தூது அனுப்பினான்; அந்த யஸீது என்கிற கொடியவன்.

# ஒரு மாவீரரின் சத்தியப்போராட்டம் "கர்பலா"

## அரசியல் அராஜகத்தின் ஆரம்பம்...

இமாம் ஹஸனும் - ஹுஸைனும் (ரஜியல்லாஹு அன்ஹும்) சொர்க்கத்து இரு தூண்களாகவும், சொர்க்கத்து தலைவர்களாகவும் இருக்கின்றனர் என்கிற ஹதீஸும், இவர்களை நேசிப்பதன் மூலமாகவே ஈமான் (நம்பிக்கை) என்ற ஆன்மா உயிர்பெறும் என்பதை உணர்ந்த புனித மதீனாவின் கவர்னர் வலீத், நேற்று மாலை யஜீதிடமிருந்து வந்த தூதுக்கட்டளையும் - யஜீதுவின் பகை உணர்ச்சியும், படை வலிமையும், கொடும்புத்தியும், அவனை எதிர்க்க தக்க ஆற்றல் யாருக்கும் இல்லாத நிலை போன்ற எண்ணங்களின் ஓட்டத்துடன்; யஜீதிடம் பகைமையும் கொள்ளாமல், யஜீதின் கட்டளையை நிறைவேற்றுவது எப்படி? இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு அவர்களை கட்டுப்படுத்தும் விஷயத்தில் ஈமானையும் இழக்காமல் செயல்பட போவது எப்படி? என்ற அச்சம் கலந்த சிந்தனையில் மூழ்கியிருந்தார்.

யஜீதின் விசுவாசியான மர்வான் இபுனு ஹகமை வரவழைத்து அவனிடம் ஆலோசனை கேட்டார் வலீது, அஹ்லுல் பைத்துகளுக்கு (நபியின் குடும்பத்தார்) மட்டும் என்ன தனிச்சிறப்பு? என்ற காழ்ப்புணர்ச்சி கொண்டவர்களுள் ஒருவனான மர்வான், "யஜீதுவின் கடிதத்தில் விஷயம் தெளிவாய் இருக்கிறது! அதை செயல்படுத்த வேண்டியது தானே!" என்றான். "கெட்ட காலமே! நபிகள் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் குடும்பத்தினருக்கா? இப்படியொரு நிலை!" என மனம் வருந்தினார் வலீது. பின் மர்வான், "சரி..... இமாமவர்களையும், அப்துல்லாஹ் இபுனு ஜுபைர் ரஜியல்லாஹு அன்ஹு அவர்களையும் வரவழைத்து யஜீதின் கட்டளையை அறிவித்து விட்டு, அதனை ஏற்றுக் கொண்டால் தங்களுக்கும் தங்கள் குடும்பத்தினருக்கும் நல்லது என யோசனை கூறலாம் என்றான்". அதற்கு வலீது அவர்கள், "கட்டளையை மட்டும் அறிவித்து விடலாம், அதற்கு மேலும் யோசனைகளையும் நிர்பந்தங்களையும் ஏற்படுத்துவதற்கு நான் தகுதியானவன் அல்ல என்றும், மேலும் இப்பிரச்சினைக்காக, என் பதவியும் வாழ்வும் பறிபோனாலும் சரியே! ...." என்றார்கள்.

இஸ்லாமிய மார்க்கத்தில் தடுக்கப்பட்டிருக்கிற (ஹராம்)

செயல்களை தமது அன்றாட பழக்கமாக்கி கொண்டு, இஸ்லாம் என்றால் என்ன? என்பதையே தெரியாமல் உள்ள ஒருவன், முஸ்லிம்களின் தலைவராய், முஸ்லிம்களை எப்படி நிர்வகிக்க முடியும்? இஸ்லாம் அழிந்து விடாதா? என்ற கேள்வி புனித மதீனா முழுவதும் முஸ்லிம்களின் மனதில் இடியாய் இடித்துக் கொண்டிருந்தது! விஷயம் இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு அவர்களின் செவிகளுக்கு எட்டிய நிலையில், “கவர்னர் வலீது உங்களை அழைக்கிறார்” என்ற செய்தி வந்தது.

அப்துல்லாஹ் இப்னு ஜுபைர் ரஜியல்லாஹு அன்ஹு இமாமவர்களை அணுகி, நமது நிலை என்ன? என்று கேட்டார். அதற்கு இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு அவர்கள் அமைதியாக உறுதியான குரலில் “அப்துல்லாஹ்வே! நாம் ஒரு விஷயத்தை உலகிற்கு அறிவித்து விட கடமைப்பட்டிருக்கிறோம். தீங்கு விளைவிக்க போகிறவனுக்கு துணை போகிறவன் கூட தீங்கு விளைவிப்பவனே! என்ற ஈருலகத்தின் நாயகர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் சொல்படி, இந்த விஷயத்தில் வழி தவறியவனுக்கு துணை போகாதிருக்கின்ற பொறுப்பு மற்றவர்களை காட்டிலும் அஹ்லுல் பைத்துகளான நமக்கே அதிகம் உண்டு. மக்களுக்கு வழி காட்டுகின்ற கடமை நமக்கே முதன்மையாக இருக்கும் பட்சத்தில், தகுதி சிறிதும் இல்லாத, இஸ்லாமிய மார்க்க கலாச்சாரத்தை கொஞ்சமும் மதிக்காத ஒருவரை, நாம் எப்படி மக்கள் தலைவராகவும், மார்க்க வழிகாட்டியாகவும் ஏற்க முடியும்? அப்படிச் செய்தால் அல்லாஹ்-ரஸுலின் கோபத்திற்கும், வெறுப்பிற்கும் ஆளாக மாட்டோமா? சகோதரரே...! நம் பாதையும் எண்ணமும் தெளிவாய் இருக்கின்றன. இவற்றினிலிருந்து நம்மை யாரும் பின்வாங்க செய்ய முடியாது” என கூறிவிட்டு, இருவருமாக சேர்ந்து கவர்னரை சந்திக்க அவரது மாளிகைக்கு சென்றார்கள்.

இமாமை கண்ட கவர்னர் வலீது அவர்கள் சட்டென்று எழுந்து நின்று மரியாதை செலுத்திவிட்டு, கொடியவன் யஜீதிடமிருந்து வந்த கட்டளையை வாசித்து காட்டிவிட்டு, “தங்கள் கருத்தை எனக்கு தெரிவிக்கலாம்” என்று இமாமை நோக்கி நயமாக கூறினார். அதற்கு இமாமவர்கள், “கிருபையுள்ள ரஹ்மான் வலீதுவுக்கு நன்மை புரியட்டும்... நல்லது, இஸ்லாமிய உலகம் இப்போது எப்படி இருக்கிறது என்பதை இந்த கடித வாசகமும், உம்மைப் போன்ற பக்தியுடையவர்களின் செயலும் காட்டுகிறது. வாள் வலிமைக்கும், தோள் வலிமைக்கும் முன்னால் அல்லாஹ்வின் கட்டளைகளும் - நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் போதனைகளும் பின் தள்ளப்பட்டு விட்டன.

நபிகளாரின் குடும்பத்தினருக்கு தொல்லை தருவதை ஒரு வீர விளையாட்டாக கருதுகிற காலம் ஆரம்பமாகிவிட்டது. எங்களை இம்சித்தால் யாருக்கும் எந்த நஷ்டமும் வராது என்று நினைக்கும் நிலை உருவாகிவிட்டது.

வலீதே...! அல்லாஹ்வின் ஹபீபும் (பிரியமானவரும்) நபியுமான முஹம்மத் முஸ்தஃபா ஸல்லல்லாஹுஅலைஹி வஸல்லமவர்களின் குடும்பத்தவராகிய (அஹ்லுல் பைத்துகள்) நாங்கள், அல்லாஹ்வின் சத்தியப் பாதையிலேயே இருக்கிறோம். அப்பாதையை பேணிக் கொள்ளாத ஒருவனுக்கு நாங்கள் பைஅத் (சத்தியப்பிரமாணம்) செய்து கொடுக்க முடியாது. நாங்கள் பட்டம், பதவி, அதிகாரம் போன்றவற்றை கேட்கவில்லை. அமைதியான வழியில் மார்க்க பணி புரியவே விரும்புகிறோம். என் தந்தை – சகோதரர்க்கு கொடுமை புரிந்து பழகியவர்கள், என்னையும் நசுக்க நாடுகிறார்கள், செய்யட்டும்....ஆனால்! இபுனு அலியின் கரம் வழிகெட்டோர்க்கு பைஅத் செய்து கொடுக்க ஒரு போதும் தாழாது! இது உறுதி!” எனக் கூறிவிட்டு, இப்போதுள்ள சூழ்நிலையின் காரணமாக அஹ்லுல் பைத்துகள் மதீனாவை துறந்து மக்கா முகர்ரமா செல்ல விரும்புவதாக கூறி வலீதிடமிருந்து விடைப்பெற்றார்கள்.

## புனித மதீனாவை துறந்த மாநபி குடும்பத்தினர்...

ஹிஜ்ரி 60ம் ஆண்டு ஷாபான் 4ம் நாள், ஹஜ்ரத் ஃபாத்திமா ரஜியல்லாஹு அன்ஹா அவர்களின் இதயத்துண்டான இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு அவர்கள், வீட்டை விட்டு வெளியே இனிவரை வந்திடாத தமது குடும்பத்து பெண்களுடனும், சிறார்களுடனும், குழந்தைகளுடனும் மற்றும் மூட்டை முடிச்சுகளுடன் வீட்டை விட்டு வெளியே வந்ததை பார்த்த புனித மதீனாவின் விசுவாச மக்கள் “எங்கள் நபிகளாரின் பேரரே! எங்களின் தோளும், வாழும் வர்க்கமும் தங்களுக்கு அர்ப்பணமாக் குகிறோம்! எங்களை அநாதைகளாக்கி விட்டு செல்லாதீர்கள்!” என தடுக்க முயற்சித்தார்கள். வானத்தை காலி செய்து விட்டு செல்கின்ற நட்சத்திர கூட்டங்களான– ஒரு பாவமும் அறியாத அஹ்லுல் பைத்துகளை ஏக்கத்துடனும் வருத்தத்துடனும் மக்கள் பார்த்தனர்.

## நபிகளார், அன்னை ஃபாத்திமா, புனித தர்காக்களில்...

உற்றார் உறவினர் மற்றும் ஊர்மக்கள் புடை சூழ ரஸூலல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் ரவ்ளா

ஷரீஃப்பிற்கு சென்ற இமாமவர்கள் சோகக்குரலில் "அஸ்ஸலாமு அலைக்க யா! ரஸூலல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்.... எனது பாட்டனார் அவர்களே! தங்களிடமிருந்து விடைப் பெற்று கொள்ள, அனுமதி வாங்க வந்துள்ளேன். தங்களின் மடியிலும் தோளிலும் வளர்ந்த அதே ஹுஸைன்தான், இப்போது தங்குவதற்கும் வாழ்வதற்கும் இடம் தேடி தன் சொந்த ஊரை விட்டே புறப்பட்டிருக்கிறான்! எந்த மக்களின் உயர்வுக்காக, தீனுக்காக, பாதுகாப்பிற்காக திருக்குர்ஆனையும் ஹதீஸையும் வரம்பாய் வைத்தீர்களோ! அந்த மக்களின் சில பிரிவினர்கள்தான் தங்களின் குடும்பத்தாரின் அமைதியை கெடுத்துள்ளார்கள்! தங்களின் அருகே, எங்களை இருக்க விடாமலிருக்கும் நிலைமையை ஏற்படுத்தியிருக்கிறார்கள்! தாங்கள் பார்த்து ரசித்து, நேசித்த அதே ஹுஸைனை இந்த மக்களின் பிரிவினர்கள் புரிந்து கொள்ளவில்லை. யா ரஸூலல்லாஹ்! ஒரு போதும் இங்கிருந்து நாங்கள் மனப்பிரியத்துடன் செல்லவில்லை. இந்தக் காலம் எங்களுக்கு விரோதமாகி விட்டது. ஆகவே எங்களுக்கு விடைதந்து, அல்லாஹ்வின் ரஹ்மத் பொழிய அருள் கூருங்கள்!" என்று கூறிவிட்டு, தமது தாய் மற்றும் சகோதரரின் அடக்கஸ்தலமிடம் சென்று அவர்களின் துவாவையும், ஆசியையும் பெற்றுக்கொண்டு விடைப் பெற்றார்கள்.

இந்தப் பயணத்தின் நோக்கம் என்ன? எதற்காக ஊரை விட்டு செல்கிறோம்? என்ற எந்த விபரமும் தெரியாத சின்னஞ்சிறார்கள், சிறிது தூரம் சென்ற பின் தத்தமது வீடுகளை திரும்பிப் பார்த்ததும், அடக்கிக் கொண்டிருந்த ஊர்மக்களின் சோகம் தொண்டையை விட்டு வெளியேறி, கதறி அழ வைத்து விட்டது!

## கடிதங்கள்...

நயவஞ்சகர்கள் அதிகமாக வாழ்ந்து கொண்டிருந்த கூஃபாவாசிகளிடமிருந்து இமாமவர்களுக்கு ஒரு கடிதம் வந்தது. அதில் "மார்க்கம் மற்றும் மனித நாகரீகம் என எதுவும் தெரியாத ஒருவனை, மக்கள் தலைவராக ஏற்றுக் கொள்ள மனமில்லை. நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் குடும்பத்தை சார்ந்த ஒரு கண்ணியமிக்க நபர், இந்த கிலாஃபத் பதவிக்கு வந்தால் நன்றாக இருக்கும். தங்கள் சகோதரரின் விட்டுக் கொடுக்கும் தன்மையால் கை மாறி போயிருக்கும் இந்தப் பதவியை உங்களிடமே சேர்ப்பதென்று முடிவு செய்துள்ளோம். எனவே தாங்கள் விரைந்து வாருங்கள்" எனக் குறிப்பிடப்பட்டிருந்தது. ஆனால் ஆட்சிப் புரிகிற நோக்கம் சற்றும் இல்லாத இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு

அன்ஹு அவர்கள், வந்த கடிதத்திற்கு சிறிதும் முக்கியத்துவம் கொடுக்காமல், மார்க்கப் பணியை அமைதியாய் ஆற்றிக் கொண்டிருந்தார்கள்.

கூஃபா நகரிலும் இமாமவர்களுக்கு ஆதரவாளர்கள் இருக்கிறார்கள் என்பது யஜீதுக்கும், அவனுக்கு பக்கத்தாளம் போட்டு அநியாயமாய் மற்றவர்களை வதைத்து பொருள் சேர்க்கும் துரோகிகளுக்கும் தெரிய வர, புரட்சிக்காரர்கள் எல்லாம் ஒன்று சேருமுன், இமாமவர்களை கைது செய்து விசுவாசப் பிரமாணம் (பைஅத்) வாங்கியே தீர வேண்டும். அப்போதுதான் புரட்சிக்காரர்களும் மற்ற இஸ்லாமிய தலைவர்களும் யஜீதின் கிலாஃபத்துக்கு எதிராக புரட்சி செய்ய துணிச்சல் பெறாமல் அடங்கிவிடுவார்கள் என்ற எண்ணத்தின் படி எப்படியேனும் அஹ்லுல் பைத்துகளை, எங்கிருந்தாலும் கைது செய்து கூஃபாவிற்கு அழைத்து வர வேண்டும் என்று கொடியவன் யஜீது கட்டளையைப் பிறப்பித்தான்.

இப்போது மக்காவில் இருந்த இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு கூஃபாவாசிகளிடமிருந்து கடிதத்திற்கு மேல் கடிதமாக சுமார் 150 கடிதங்கள் ஒன்றன் பின் ஒன்றாக வந்து சேர்ந்தன. அந்த அனைத்து கடிதங்களிலும் ஒரே ஒரு விஷயம் மட்டும் தெளிவாக இருந்தது. அது, “மார்க்கத்தையும் மக்களையும் காப்பாற்ற துடிக்கிறோம். எங்களுக்கு வேண்டியதெல்லாம் தகுதியுள்ள ஒரு தலைமைதான். அப்பொறுப்பை நீங்கள் ஏற்றுக் கொண்டு விட்டால் மற்ற விஷயங்களை நாங்கள் பார்த்துக் கொள்கிறோம்... இல்லையென்றால் **மார்க்க சீரழிவு ஏற்படும் அபாயம் உள்ளது**” என்ற வாசகங்கள் இமாமவர்களை, மார்க்கத்தை காக்க வேண்டிய கடமையையும் பொறுப்பையும் உணர்த்தி சிந்தனையில் ஆழ்த்தியது!

மனமாற்றம் அடைந்திருந்த இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு அவர்கள், கூஃபா மக்களின் உண்மை நிலையை அறிந்து கொள்வதற்காக தமது சிறிய தந்தையின் மகன் முஸ்லிம் இபுனு அகீலை (ரஜியல்லாஹு அன்ஹு) தேர்ந்தெடுத்து, “நமது ஆதரவாளர்களின் நிலை, அவர்களின் பலம், எதிரிகளின் பலம் போன்றவற்றை தெளிவாய் அறிந்து எனக்கு செய்தியறிவிக்க வேண்டும்” எனக்கூறி கூஃபாவாசிகளுக்கு தாம் எழுதிய கடிதம் ஒன்றையும் கொடுத்து கூஃபாவிற்கு அனுப்பி வைத்தார்கள். அக்கடிதத்தில், “இக்குறைந்த காலத்தில் ஏராளமான கடிதங்கள் எனக்கு எழுதியிருக்கிறீர்கள். இந்த எண்ணிக்கை முக்கியமல்ல,

உங்களின் உணர்வே முக்கியம். எனது நோக்கம் அல்லாஹ்வை வணங்கி வாழ்வதில் உள்ளது. எனது இன்பம் பிறவற்றில் கிடையாது. யஜீதின் படை வலிமை, தந்திரத்தை முறியடிப்பதற்கு நீங்கள் ஒருமித்த மனதுடன் பின் வாங்காத மனோ பலத்தையும் திடமாக கொண்டிருக்க வேண்டும். அப்பொழுதுதான் நான் தலைமை ஏற்பதில் அர்த்தம் இருக்கும். நான் அங்கே வரும் வரை, என் சகோதரர் முஸ்லிம் இப்னு அகீலை உங்கள் தலைவராக; தொழுகையில் இமாமாக வைத்துக் கொள்ளுங்கள். அல்லாஹ் நமக்கு போதுமானவனாக இருக்கின்றான்." என இமாமவர்கள் எழுதியிருந்தார்கள்.

"மார்க்கப்பற்றும் நன்னடத்தையும் இல்லாத ஒருவரை அதிகாரத்திலிருந்து அகற்றி விட்டு, முஸ்லிம்கள் தங்களுக்கு நேர்மையான தலைவர் ஒருவரை தேர்ந்தெடுக்க வேண்டும் என நினைக்கிறார்கள். அவர்களின் நியாயமான போராட்டத்திற்கு நமது ஆதரவை கேட்டு அழைக்கிறார்கள், அதற்கு உதவுவது நமது கடமை அல்லவா?" என இமாமவர்கள் தம் குடும்பத்தாரிடமும், தோழர்களிடமும் கேட்டார்கள். இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு அவர்களின் இந்த மனமாற்றம் மற்றவர்களுக்கு ஒரு வித அச்சத்தை உண்டாக்கியது! "யஜீதின் தலைமை தேவையில்லை என்கிறவர்கள் அவனை ஆட்சியிலிருந்து அகற்றி விட்டு, தங்களை அழைத்திருந்தால்; தங்களின் தலைமைதான் தேவை என்று அவர்கள் கூறுவதை நம்ப முடியும். ஆனால் அப்படி செய்யாமல் திடீரென்று தங்களை அழைப்பது நல்லதென்று படவில்லை" என தோழர்கள் தங்களின் கருத்துகளை இமாமிடம் தெரிவித்தனர்.

நமக்கு கடிதம் எழுதியவர்களில் கூஃபாவின் முக்கியஸ்தர்களான காஜி ஷீரைஹ்ன், ஹபீபு முஜாஹிர், முஹம்மது அஷ்அத், முஹம்மது ஃபராஜ், முக்தார் அபூ உபைதா முதலியோர் எழுதி கையெழுத்திட்டிருந்த ஒரு கடிதத்தையும் இமாமவர்கள் தமது தோழர்களிடம் காண்பித்தார்கள். எனினும் கூஃபாவாசிகளை நம்பி அங்கு செல்ல வேண்டாம் என இமாமை அவரது தோழர்களும், குடும்பத்தார்களும் கேட்டுக் கொண்டனர்.

இதற்கிடையில் கூஃபா சென்ற ஹஜ்ரத் முஸ்லிம் இப்னு அகீல் ரஜியல்லாஹு அன்ஹு, கூஃபாவின் தலைமை அதிகாரியாக இருந்த நுஃமான் இப்னு புஷைரை சந்தித்து, இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு அவர்கள் இங்கே வருவதைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்? என்று வினவ, அதற்கு நுஃமான், "நான் இமாமவர்களின் கட்சியினராகவே இருக்க விரும்புகிறேன்.

கூஃபாவாசிகளின் மொத்த மக்களின் உணர்வுகளைப் பற்றி சொல்வதற்கில்லை, நான் இன்னும் யஜீதின் ஊழியனாகவே உள்ளேன். இதற்கு ஒரு முடிவு வருகிற வரை பகிரங்கமாய் உங்கள் சார்பில் செயற்பட முடியாது" என தெரிவித்து விட்டார். முஸ்லிம் இப்னு அகீல் ரஜியல்லாஹு அன்ஹுவின் வரவு யஜீதை பிடிக்காத கூஃபாவாசிகளுக்கு உற்சாகத்தை கொடுத்தது. இதைக் கண்ணுற்ற நயவஞ்சகர்கள் அஹ்லுல் பைத்துகளுக்கு எதிரான ஒரு தலைமை அதிகாரியை கூஃபாவிற்கு அனுப்பி வைக்குமாறு ஸிரியாவில் உள்ள கொடியவன் யஜீதுவுக்கு தூது அனுப்பினார்கள்.

## இப்லீஸான இப்னு ஸியாது...

பஸராவின் கவர்னராக இருந்த உபைதுல்லா இப்னு ஸியாது கூஃபாவிற்கு புதிய தலைமை அதிகாரியாக நியமணம் செய்யப்பட்டான். இவன் அஹ்லுல் பைத்துகள் மீது காழ்ப்புணர்ச்சி கொண்டவன், யஜீது இவனைக் கொண்டே தமது சாத்தானிய வேலைகளை ஆரம்பம் செய்தான். தம்மைப் பற்றி தவறாக பிரச்சாரம் செய்கிறவர்களையும், அதை நம்புகிறவர்களையும் ஈவிரக்கமின்றி கொல்ல வேண்டும் என்ற கட்டளையோடு இப்னு ஸியாதை கூஃபாவிற்கு அனுப்பி வைத்திருந்தான்.

ஒரு படை பலத்துடன் கூஃபா வந்து சேர்ந்த இப்னு ஸியாது, முதலில் நுஃமான் அவர்களை சிறைப் பிடித்தான். இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு அவர்களின் ஆதரவாளர்கள் எனத் தெரிந்த பொதுமக்களை கசை அடி கொடுத்து துன்புறுத்தினான். இதனால் இமாமவர்களுக்கு ஆதரவு தந்தவர்களில் பல பேர் பயத்தினால் யஜீதின் பக்கமே தலை சாய்த்தனர்.

ஹஜ்ரத் முஸ்லிம் இப்னு அகீல் ரஜியல்லாஹு அன்ஹுவுக்கு ஆதரவு அளித்த ஹஜ்ரத் ஹானி, ஹஜ்ரத் அஸ்மத் இப்னு ஹாரிஜா (ரஜியல்லாஹு அன்ஹுமா) போன்ற நபித்தோழர்களை கசை அடி கொடுத்து உயிர் துறக்க செய்தான். இந்தப் பிரச்சினையில் உயிர் துறந்த முதல் தியாகிகள் இவர்களே ஆவார்கள். ஹஜ்ரத் முஸ்லிம் இப்னு அகீல் ரஜியல்லாஹு அன்ஹு அவர்கள், இப்னு ஸியாதிடம் வீரப்போர் புரிந்தார்கள். இறுதியில் இப்னு ஸியாதின் படைகளால் சூழப்பட்டு, சிறைப்பிடிக்கப்பட்டு ஹிஜ்ரி 60 துல்ஹஜ் மாதம் 3ம் நாள் தூக்கிலிடப்பட்டு ஷஹீதானார்கள். இச்சம்பவம் நடக்கும் முன்னரே இமாமவர்களை கூஃபாவிற்கு வரவழைப்பதற்கான ஒரு சூழ்ச்சி கடிதத்தையும் எழுதி அனுப்பியிருந்தான் இப்னு ஸியாது.

கூஃபாவில் நடந்த சம்பவங்கள் எதுவும் அறியாத பட்சத்தில், ஓர் கிராமவாசி மூலம் முஸ்லிம் இப்னு அகீல் ரஜியல்லாஹு அன்ஹுவின் கடிதம் என கடிதத்தை பெற்ற இமாமவர்கள் மட்டற்ற மகிழ்ச்சியுடன் படித்துப் பார்த்தார்கள், அதில் "அன்புச் சகோதரர் இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு அவர்களே! இராக் தேசம் முழுவதும் நமக்கு பைஅத் (சத்தியப் பிரமாணம்) செய்து கொடுக்க காத்திருக்கிறார்கள். மக்காவிலிருந்து விரைவில் தாங்கள் புறப்பட்டு இங்கே (கூஃபா) வருவது நல்லது. மக்கள் தங்களின் வருகையை ஆவலாக எதிர்பார்த்து இருக்கிறார்கள். தயக்கமோ யோசனையோ! தேவையில்லை!"

**தங்கள் சகோதரன்,**
**முஸ்லிம் இப்னு அகீல்.**

## புனித மக்கா நகரை பிரிதல்...

இப்போது இமாமவர்கள் தம் குடும்பத்தாருடன் கூஃபாவை நோக்கி புறப்பட தயாரான செய்தி மக்கா மாநகர் முழுவதும் பரவியது. உற்றார்கள், உறவினர்கள், தோழர்கள் என அனைவரும் இமாமை நோக்கி, வஞ்சகம் நிறைந்த கூஃபாவிற்கு செல்ல வேண்டாம் என தடுத்தனர். ஹஜ்ரத் அப்துல்லாஹ் இப்னு ஜாஃபர், அம்ரு இப்னு ஸயீது ஆஸ், ஹஜ்ரத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரஜியல்லாஹு அன்ஹும்) போன்றோர் எவ்வளவு தடுத்துப் பார்த்தும் இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு அவர்களின் முடிவில் எந்த வித மாறுதலும் இல்லை.

அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் ரஜியல்லாஹு அன்ஹு அவர்கள் "எப்படியாவது நடக்கட்டும் என்று மௌனமாக இருக்க நினைக்கிறேன், முடியவில்லையே" என்றார். அதற்கு இமாமவர்கள், "சகோதரரே! என் நலத்தில் உங்களை விட அதிக அக்கறையுடையவர் கிடையாது என்பதை ஒப்புக் கொள்கிறேன். ஆனால் என்ன செய்ய? என் சார்பாக சகோதரர் முஸ்லிம் அங்கே வேலைச் செய்து கொண்டிருக்கிறார், வரச் சொல்லி கடிதமும் அனுப்பியிருக்கிறார். அப்புறம் நான் புறப்படாமல் இருப்பது நல்லதாகுமா?" எனக் கேள்வியைத் தொடுத்தார்.

## உதவிக்கரம் நீட்டிய ஹாதிம் தாயியின் பேரர்...

பயணம் புறப்படுவதற்கு முதல் நாள் ஹாதிம் தாயியின் பேரரான தரஹ் (ரஹிமஹுல்லாஹ்) அவர்கள் இமாமவர்களிடம், "இந்த பயணத்தின் உண்மையான நோக்கம் என்ன? தங்களுக்கு

தொல்லை கொடுத்தவர்களை எதிர்த்து போர் செய்ய போகிறீர்களா? அப்படியானல் சொல்லுங்கள், பொறுக்கியெடுக்கப்பட்ட 10 ஆயிரம் வீரர்களை தங்களுடன் அனுப்பி வைக்கின்றேன்" என்றார்கள். அதற்கு இமாமவர்கள், "தங்கள் ஆதரவுக்கு நன்றி, தமக்கு போர் செய்யும் எண்ணமெல்லாம் கிடையாது" என்று தம் எண்ணத்தை கூறி அனுப்பிவிட்டார்கள்.

இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு ஏற்படுகிற முடிவு தங்களுக்கும் ஏற்படட்டும் என தீர்மானித்த அவரது குடும்பத்தை சார்ந்த ஆண்களும், பெண்களும், குழந்தைகளும் மற்றும் இமாமின் நண்பர்களும், ஆதரவாளர்களும் கூடிய ஒரு சிறு கூட்டம் ( 65 முதல் 72 நபர் வரை ) ஹிஜ்ரி 60 துல்ஹஜ்ஜு மாதம் 3ம் நாள் அதாவது, முஸ்லிம் இப்னு அகீல் ரஜியல்லாஹு அன்ஹு அவர்கள், கூஃபாவில் தூக்கிலிடப்பட்ட அதே தினத்தன்று; மக்கா மாநகரை கண்ணீரில் ஆழ்த்திவிட்டு கூஃபாவை நோக்கி புறப்பட்டது!

அரபு உலகின் புகழ்மிக்க கவிஞர் ஃபர்ஸதக், அஹ்லுல் பைத்துகளை ஸப்பாஹ் என்கிற இடத்தில் சந்தித்து "**அல்லாஹ்வின் ரஹமத்து தோட்டத்தின் பரக்கத்து மலர்களே! எங்கே செல்கிறீர்கள்?**" கூஃபாவிற்கு என்ற பதிலைக் கேட்டதும், "**கூஃபாவிற்கா...?**" "ஆம் அம்மக்கள் எங்களை அழைத்திருக்கிறார்கள்.... போகிறோம்!" என்றார்கள் இமாம். "**பலிப்பீடத்தில் கொலைக் கருவிகளுடன் நிற்பவர்களுக்கு ரோஜாத் தோட்டம் எதற்கு?**" என கவிஞர் புலம்பினார்கள். கூஃபா மக்கள் எங்களை ஆதரிக்க மாட்டார்களா? என இமாமவர்கள் வினவ "அவர்களது இதயம் உங்களை ஆதரிக்கிறது, அவர்களது வாளோ உங்களைப் பிடிக்காதவர்களை ஆதரிக்கிறது" என்றார் கவிஞர். இதனைக் கேட்ட அனைவரும் திகைத்தனர்.

இமாமவர்கள் அமைதியாய் தம் குடும்பத்தினரைப் பார்த்து, "அல்லாஹ்வின் விருப்பத்தை அல்லாஹ்வே அறிவான். நமது விருப்பம் அவனது நாட்டமாக இருக்குமாயின் நன்றியுடன் அவனைப் புகழ்வோம். வேறுவிதமாக இருக்குமாயின் அதை பொறுமையுடன் ஏற்றுக் கொள்வோம். எனது மக்களே! நாம் சத்தியத்தின் மீது இருக்கிறோம் என்கிற உணர்வினை மறந்து விடாதீர்கள்" எனக் கூறினார்கள்.

நண்பகல் நேரம் சுட்டெரிக்க கூடிய வெயிலில் ஸர்தூ என்கிற இடத்தை அடைந்தனர் அஹ்லுல் பைத்துகள்.

கூஃபாவிலிருந்து மக்கா மாநகரை நோக்கி செல்லும் பக்ர் இப்னு அஸதீ மூலம் கூஃபாவில் நடந்தேறிய சம்பவங்களை கேள்வியுற்று இமாமவர்கள், **இன்னா லில்லாஹி வ இன்னா இலைஹி ராஜீஊன்** எனத் திரும்ப திரும்ப சொல்லிக் கொண்டு, தம் தோழர் முஸ்லிம் இப்னு அகீலை (ரஜியல்லாஹு அன்ஹு) நினைத்து கண்களில் நீர்வடித்துக் கொண்டிருந்தார்கள். இப்பொழுது கூஃபாவாசிகளின் நிலைமை தெளிவாய் தெரிந்து விட்டது எனக் கூறிய தமது கூட்டத்தினர்கள் "இப்பொழுது நாம் மக்காவிற்கு திரும்பி விடுவோம், தேவையானால் தகுந்த படைப்பலத்துடன் வந்து துரோகிகளை முறியடிப்போம்" என்றார்கள். ஆனால் ஹஜ்ரத் முஸ்லிம் அவர்களின் சகோதரர்கள், "நமக்கென்று ஒரு சில ஆதரவாளர்கள் நிச்சயமாக இருப்பார்கள், அவர்களிடம் அநியாயத்தை விளக்கி பேசி, எப்படியாவது ஹஜ்ரத் முஸ்லிமின் கொலைக்கு பழி வாங்கிட வேண்டும் என்றார்கள். இதனால் இமாமவர்கள் ஒரு முடிவுக்கும் வர முடியாமல் அமைதியாய் இருந்தார்கள்".

## *அலீ அக்பர் ரஜியல்லாஹு அன்ஹு...*

இமாமவர்களின் மகனான அலீ அக்பர் ரஜியல்லாஹு அன்ஹு தம் தந்தையிடம், "தந்தையே! நாம் எதன் மீது இருக்கிறோம்? நம் பாதை சத்தியமானது தானே!" இமாமவர்கள் அதற்கு "ஆம், நாம் சத்தியப் பாதையில் தான் இருக்கிறோம்" என்றார்கள். "அப்படியென்றால் நாம் யோசிப்பதற்கோ, பின்னடைவதற்கோ என்ன இருக்கிறது? சத்திய வழிச் சென்ற நம் முன்னோர்கள் ஒரு போதும் பின்னடைந்ததில்லையே! சத்தியத்தை நிலைநாட்ட வேண்டியது அல்லாஹ்வின் செயலல்லவா?" என்ற மகனின் உற்சாக சொற்களை கேட்ட இமாமவர்கள், பயணத்தை முன்னோக்கி தொடருமாறு கட்டளையிட்டார்கள்.

பயணம் தொடர்ந்து கொண்டிருக்கிற நிலையில், கிராம வாசிகளின் ஒரு கூட்டம் இமாமை பார்த்து தாங்கள் கூஃபாவுக்கு செல்வதாக கேள்வியுற்றோம். கூஃபா மிகப்பெரிய பட்டணமாமே! அங்கு வாழ்க்கை வசதிகள் ஏராளமாய் இருக்குமாமே! என்று கூறி நாங்களும், உங்கள் கூட்டத்துடன் சேர்ந்து பயணத்தை தொடர்கிறோம் என்றது. இமாமவர்கள் எதுவும் பதில் சொல்லவில்லை! காதுஸியா என்ற இடத்தில் மக்களை நோக்கி இமாமவர்கள், "வழியில் கிடைத்த செய்திகள் நம்பிக்கை அளிப்பதாக இல்லை, நமக்கு கூஃபாவில் உதவுபவரும் யாருமில்லை! இப்போது இந்த பாதையின் போக்கும், முடிவும் விதியின் திரைக்கு முன்னால் எப்படி

உள்ளது என்பதையும் சொல்வதிற்கில்லை! எனது சகோதரர்கள், தோழர்கள், உறவினர்கள் எவ்வளவு தடுத்தும் கேட்காததன் விளைவை உணர்கின்றேன். இந்தப் பாதை சுகமும், மகிழ்ச்சியையும் கொண்டதல்ல. அடுத்து என்ன? என்பதை அல்லாஹ்வே அறிவான்! ஆனால் ஹுஸைன் (ரஜியல்லாஹு அன்ஹு) கோழையல்ல! அவன் மூதாதையர்களில் ஒருவரும் அப்படி இருந்ததில்லை, தவக்கல், தக்வாவில் இருந்து உலக வாழ்வை அற்பமாகவே நினைத்தனர்-வாழ்ந்தனர். எங்கள் பாதையையும் அதன் அபாயங்களையும் தெளிவாய் அறிவித்து விட்டேன். இனி எங்களுடன் தொடர்ந்து வர விரும்புகிறவர்கள் வரலாம், போக விரும்புகிறவர்கள் திரும்பி விடலாம். அதனால் எனக்கு எவர் மீதும் எந்த வருத்தமும் இருக்காது" என கூறினார்கள். இப்போது மக்காவிலிருந்து துணையாய் வந்தவர்களும், இமாமின் குடும்பத்தவர்கள் மட்டுமே இருந்தனர். பயணம் முன்னோக்கி தொடர்ந்தது....

**படை சூழல்...**

இப்னு ஸியாது, தளபதி ஹுர்ரின் தலைமையில் ஓராயிரம் படைவீரர்களை கொடுத்து, வரக்கூடிய இமாமவர்களை வேறெங்கும் செல்ல விடாது, அவர்களை சூழ்ந்து கொண்டு தம்மிடம் கொண்டு வந்து சேர்க்குமாறு கட்டளையைப் பிறப்பித்தான். சுர்ராத் என்கிற இடத்தில் ளுஹர் தொழுகைக்கு தயாராகி கொண்டிருந்த இமாமவர்களிடம், வந்த தன் நோக்கத்தை கூறினார் ஹுர். தொழுகையை முடித்துக் கொண்டு, அப்புறம் பேசிக் கொள்ளலாம் என்ற இமாமவர்கள், "நீங்கள் வேண்டுமென்றால் தனியாய் தொழுது கொள்ளுங்கள்" என்றார். தாங்கள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பேரர், வீரர் அலீயின் (கர்ரமல்லாஹு வஜ்ஹஹு) புதல்வர், தாங்கள் உள்ள போது தனியாய் தொழுவது நல்லதல்ல என்று கூறி இமாமுடன் சேர்ந்து தொழுதார் ஹுர். இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹுவும் ஹுர்ருக்காக துஆ செய்தார்கள். (இந்த துஆ அல்லாஹ்விடம் ஏற்றுக் கொள்ளப்பட்டது என்பது பின்னர் தெரிய வரும்)

இமாமவர்கள் தமது வாளை தரையில் ஊன்றியவாறு படைவீரர்களை நோக்கி, "ஷாம் தேசத்து வீர இளைஞர்களே! இவ்வுலகமும் நிலையானதல்ல, இதன் வாழ்வும் நிலையானதல்ல என்ற உண்மையை, மரணம் நம்மை நெருங்கும் போது உணர்ந்து கொள்ளப் போகிறோம்! நாம் காண்கின்ற அனைத்தும் அந்த அல்லாஹ்வுக்கே உரியவை. அவனது கட்டளைப்படி, தந்த வாக்குறுதியை நிறைவேற்றாதவர்கள் தண்டிக்கப்படுவார்கள்.

வாக்குறுதியே எல்லாவற்றிலும் மேலானது! அதுவே மனிதனை அடையாளம் காட்டுகிறது. நீங்கள் கடிதம் மூலம் காட்டிய வாக்குறுதியை நம்பி, நான் என் குடும்பத்தாருடன் வந்துள்ளேன். அல்லாஹ்விற்கு பயந்து, உங்கள் வாக்குறுதிகளை நிறைவேற்றும் நிலையில் உறுதியுடன் நிற்பீர்களாயின், நான் மகிழ்வுடன் கூஃபாவிற்கு வருகிறேன். இல்லையென்றால், நான் புறப்பட்ட மக்கா மாநகரிற்கே திரும்பி விடுகிறேன்" என்றார்.

## நயவஞ்சகர்களின் கடிதங்கள்...

எந்தக் கடிதம்? என்ன வாக்குறுதி? என்று ஹுர் வினவினார். இமாமவர்கள், இரண்டு பைகளில் இருந்த கடிதங்களை ஹுர்ரின் முன் கொட்டினார்கள். அதை எடுத்து வாசித்த ஹுர், அதில் பெயர் மற்றும் கையொப்பம் இட்டிருந்த நபர்கள் தம் படையில் இருப்பதை பார்த்தார். அந்த நயவஞ்சகர்களின் முகம் வெட்கத்தால் மாறுவதை ஹுர் கவனித்தார். எனினும் தம் கடமையை நிறைவேற்ற, இப்னு ஸியாதிடம் இமாமவர்களை ஒப்படைப்பதே என்றார் ஹுர். அதற்கு இமாமவர்கள், "அநியாயக்காரர்களின் நிபந்தனைகளுக்கு இந்த ஹுஸைன் பணிந்து விடுவான் என ஒரு போதும் நினைக்க வேண்டாம்" என்றார்கள்.

இருவரும் பேசிக்கொண்டிருக்கும் போதே, இப்னு ஸியாதிடமிருந்து ஒரு தூதுவன் கடிதம் கொண்டு வந்தான். அதில், "ஹுர்ரே... இமாமவர்களை தண்ணீர் மற்றும் பசுமை உள்ள இடங்களில் தங்க விட வேண்டாம்!" எனக் கட்டளையிடப் பட்டிருந்தது! ஹுர்ரின் கண்கள் கலங்கின. அஹ்லுல் பைத்துகளுக்கு இந்த நிலையா! என்று மனம் துடித்தார். இமாமை நோக்கி, "இமாமவர்களே! என் பிரச்சினை ஈமான் சம்பந்தபட்டிருப்பதாய் உள்ளது. தங்களை நோக்கி வந்து கொண்டிருந்த போது பறவைகள், மிருகங்கள், தாவர வர்க்கங்கள் எல்லாம் என்னை சபித்ததை கேள்வியுற்றேன்! அல்லாஹ்வின் ரஸுலின் பேரரே! என் மீது இரக்கம் காட்டுங்கள். நான் என் எஜமானருக்கும் துரோகம் செய்ய முடியாது... தங்கள் சாபத்திற்கும் அஞ்சுகிறேன்! ஆகவே, நீங்களே ஒரு முடிவு சொல்லுங்கள்" என்றார். இமாமவர்கள் அமைதியாக ஒன்றும் பேசாமல் பயணத்தை தொடர்ந்தார்கள்.

## இமாமின் போதனைகள்...

இமாம் ஹுஸைன் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் கூட்டத்தாரும், எதிரிப்படைகளும் பைஸா என்ற இடத்தை

அடைந்த போது, இமாமவர்கள் ஹுர் மற்றும் எதிரிப்படைகளை நோக்கி, “நமது நேர்வழிக்கான சகல திறவுகோல்களும் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் உபதேசங்களில் கொட்டிக் கிடக்கின்றது. எந்த மாதிரி அதிகாரிகளுக்கு மக்கள் பணிய வேண்டியதில்லை என்கிற தெளிவையும் பெற முடியும். அக்கிரமம் செய்து அல்லாஹ்வின் வாக்குறுதிகளை மீறுபவர்கள், திருக்குர்ஆன் தந்த சட்டங்களை மீறுபவர்கள், இறைநேசர்கள் மீது அடக்குமுறை கையாண்டு கொடிய ஆட்சி புரிகிறவர்கள் மீது மக்கள் தங்கள் எதிர்ப்பை சொல்லாலோ, செயலாலோ, உணர்த்த வேண்டும். இல்லையெனில் அந்த மக்களுக்கு நற்கதியில்லை, மறுமை நற்பேறும் இல்லை.

இப்போது என்ன நடந்து கொண்டிருக்கிறது என்று நீங்கள் பார்க்கவில்லையா? அல்லாஹ்வின் சட்டம் செயலற்று கிடக்கிறது. பைத்துல்மால் பொருட்கள் அநியாயமாய் கொள்ளையடிக்கப் படுகிறது. ஹலால் ஹராமாகவும், ஹராம் ஹலாலாகவும் மாற்றப்பட்டுள்ளது என்பதையெல்லாம் உணர்ந்து கொள்ளவில்லையா?

நீங்கள் எல்லாவற்றையும் பார்த்து, பார்க்காத மாதிரி இருக்கிறீர்கள், உங்களை இப்படி செயலற்று போகச் செய்தது, அழிந்து போகக் கூடிய இந்த உலகாசை தானே! ஆனால் நாங்கள் அப்படியில்லை, அநீதியை நீதியென்றும், அக்கிரமத்தை அழகிய தர்மம் என்று எதற்காகவும் ஏற்றுக் கொள்ள முடியாது.

உங்கள் வாக்குறுதிகளை நம்பி வந்தேன், ஆனால் நீங்கள் அதை மறந்துவிட்டீர்கள்! அலீயின் (கர்ரமல்லாஹு வஜ்ஜஹு) புதல்வனான இந்த ஹுஸைன்- ரஸுலுல்லாஹ் அவர்களின் பேரனல்லவா? என்னிலிருந்து உங்கள் முகத்தை திருப்பாதீர்கள். என்னை உங்கள் முன்மாதிரியாக ஆக்கிக் கொள்ளுங்கள். அப்படிச் செய்தால் அது உங்களுக்கே மிகவும் நல்லது!” என்ற அறிவுரைகளை வழங்கி விட்டு யோசனையில் ஆழ்ந்தார்கள்.

இமாமவர்களின் அருகே சென்ற அன்புச்சகோதரி ஹஜ்ரத் ஜைனப் ரஜியல்லாஹு அன்ஹா, “அருமை சகோதரரே!... நமக்கு இப்போது உதவுபவர்கள் யாருமில்லையா...?” எனக் கேட்டார்கள். அதற்கு இமாமவர்கள், “ஏன் இல்லை! அல்லாஹ் இருக்கின்றான். அவன் தந்த நம்பிக்கையும் (ஈமானும்), அவனது ரஸுலின் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) துஆ பரக்கத்தும், அர்ஷின் சிங்கம் அலீயின் (கர்ரமல்லாஹு வஜ்ஜஹு) வீரமும் இருக்கின்றது.

ஆனால் எனக்கு அறிவுறுத்திய சகோதரர்களின் பேச்சை கேட்காமல், பெண்களையும், குழந்தைகளையும், அழைத்து வந்ததுதான் வருத்தமாய் உள்ளது!" "அப்படியானால் நமது நிலை எப்படியிருக்கிறது?" என்று அன்புச் சகோதரி கேட்க, இமாமவர்கள், "அதை அல்லாஹ்வே அறிவான்! சகோதரி... நாம் நேரான வழியிலேயே இருக்கிறோம்... ஒன்று சொல்லட்டுமா? தந்தை ஆதம் அலைஹிஸ் ஸலாம் இவ்வுலகுக்கு முதலில் கண்ணீரையே கொண்டு வந்தார்கள்" என்றார்கள். ஹஜ்ரத் ஜைனப் ரஜியல்லாஹு அன்ஹா, "அல்ஹம்துலில்லாஹ்!" என்றார்கள்.

அஸர் தொழுகைக்கு பிறகு இமாமவர்கள், மீண்டும் ஹுர் மற்றும் எதிரிப்படைகளை நோக்கி, "என்னைப் பற்றி கவலை யில்லை, நான் ஷஹாதத்தின் மரணத்தையே விரும்புகிறேன். அநியா யக்காரர்களின் மத்தியில் அமுதுண்டு வாழ்வதும் குற்றமே! என்ற உணர்வோடுதான் உங்கள் முன் நிற்கிறேன். ஆனால் நீங்கள் உங்கள் பங்கை ஆற்ற வேண்டாமா? ஓ முஸ்லிம் உலகமே! தீனுக்காக தன் உயிர், பொருள், ஆசை அனைத்தையும் தியாகம் செய்வதில் இன்பம் கண்ட ஆண்மையினமே! சத்தியத்திற்காக போராட வா..." என்ற எழுச்சி மிக்க பேச்சைக் கேட்டு ஜஹீர் என்றவரும் மற்ற சிலரும் "நாங்கள் நிலைமையை புரிந்துக் கொண்டோம்... இனி தங்களுக்கு எதிராக வாள் எடுக்கிற பாவத்தின் பக்கம் மீள மாட்டோம். தங்களோடு ஒத்துழைக்கிற முயற்சி, எங்களுக்கு மரணத்தையே கொடுத்தாலும் சரி! நாங்கள், உங்களுடனேயே இருப்போம் அல்லது செத்து மடிவோம்" என்று இமாமவர்களின் அணியில் சேர்ந்தனர்.

கொடியவன் யஜீதுக்கு பைஅத் செய்து தர இமாமவர்கள் ஒத்துக்கொள்ளாத பட்சத்தில், படைகளை சூழ்ந்து போரைத் துவக்கி உயிரைப் பறிக்க இந்த கொடியவர்கள் தயங்கமாட்டார்கள். எனவே தங்களது பாதுகாப்பை கருதி, கடிதம் மூலம் தங்களை மிகவும் வற்புறுத்தி அழைத்த சுலைமான் என்ற செல்வாக்கு மிக்க கூஃபாவாசிக்கு விவரத்தை விளக்கி எழுதி, நமக்கு உதவி செய்ய அழைக்கலாம் என்ற தோழர்களின் யோசனைக்கு உட்பட்டு கைஸ் அரபி (ரஜியல்லாஹு அன்ஹு) மூலம் இமாம் அவர்கள் தூது அனுப்பினார் ஆனால் தூதை கொண்டு சென்றவர் இப்னு ஸியாதின் உத்தரவுப்படி கூஃபாவின் எல்லையில் படுகொலை செய்யப்பட்டார்.

அதீபுல் ஹஜனாத் என்ற பாலைவன பகுதியில் விடியல் நேரத்தில் சுதந்திரத்திற்காக போராடும் மகத்துவமுள்ள விரிந்த நெஞ்சினைக் கொண்ட கனவானை நோக்கி என் ஓட்டகமே

விரைந்து செல், என்ற பாடலோடு தர்மாஹ் இபுனு அதீ ரஜியல்லாஹு அன்ஹு, இமாமவர்களிடத்தில் வந்து - "நாங்கள் தோட்டத்தில் வேலை செய்து கொண்டிருக்கும் போது, அஹ்லுல் பைத்துகளுக்கு ஏற்பட்ட கஷ்டமான சூழ்நிலை தெரியவந்தது. அதனால் எங்களுடைய உயிராசைகளையும் தோட்டத்திலேயே புதைத்து விட்டு, நாங்கள் நால்வரும் வந்துள்ளோம்" என்றனர். மேலும், "எங்கள் கண்மணிகளே, எங்கள் உடலில் கடைசித் துளி இரத்தம் இருக்கிறவரை, இந்த எதிரிகளை உங்கள் பக்கம் நெருங்க முடியாதபடி பார்த்துக் கொள்கிறோம். - அல்லாஹு அக்பர்" என தக்பீர்களை முழங்கினார்கள்.

தர்மாஹ் இபுனு அதீ ரஜியல்லாஹு அன்ஹு கூஃபாவிலிருந்து வந்ததனால் தற்பொழுதுள்ள நிலைமையை தெளிவாக இமாமவர்களிடம் கூறினார்கள். கைஸ் அரபி ரஜியல்லாஹு அன்ஹு கொல்லப்பட்ட செய்தி அறிந்த இமாமவர்களின் கண்களில் இருந்து தாரை தாரையாய் கண்ணீர் வழிந்தோட, அவருக்காக துஆ செய்தார்கள். சிறிது நேரம் கழிந்த பின், இபுனு அதீ ரஜியல்லாஹு அன்ஹு கூறலானார்கள், "கூஃபாவின் பள்ளத்தாக்கில் ஒரு பெரும்படை தயார் நிலையில் வைக்கப்பட்டுள்ளது. அநேகமாக தங்களுடன் போர்த் தொடுக்க திரட்டப்பட்டவர்களே என நினைக்கிறேன்", என்றார். பின் சிறிது நேர யோசனைக்கு பின் இமாமவர்களே! "நான் உங்களை உஜா என்ற மலைப்பிரதேசத்துக்கு அழைத்துச் செல்கிறேன். அங்கு பத்தே நாட்களில் 20,000 வீரர்களை திரட்டிக் கொண்டு எதிரிகளிடம் போர் புரியலாம்" என்றார். அதற்கு இமாமவர்கள் "அல்லாஹ் உங்களுக்கு நல்லருள் புரிவானாக. எதிரிகள் சூழப்பட்ட நிலையில் இது சாத்தியம் அல்ல! மேலும் நண்பரே! நம்பிக்கை இழந்து இரத்தம் சிந்துகிற முடிவுக்கு நாம் ஏன் வர வேண்டும்? முடிந்தவரை சமாதான மார்க்கத்திற்கே கடைசிவரை முயல்வோம். அதற்கு மேல் அல்லாஹ்வின் நாட்டப்படி நடக்கட்டும்" என்றார்கள். பயணம் முன்னோக்கி தொடர்ந்தது...

## இமாம் அவர்கள் கண்ட கனவு...

கஸ்ரா பனீ மகாயீல் என்ற இடத்தில் சற்றுக் கண்ணயர்ந்து உறங்கிய இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு திடுக்கிட்டு எழுந்து அல்ஹம்துலில்லாஹ்! என்று சொன்னார்கள். விவரம் என்ன? என்று தன் மகன் அலீ அக்பர் ரஜியல்லாஹு அன்ஹு வினவிய போது, "ஒட்டகத்தின் மீது வருகிற ஒரு மனிதர், மக்கள் கூட்டம் செல்கிறது - மரணமும் அவர்களை பின் தொடர்ந்து வருகிறது என்ற

மரண முன்னறிவிப்பை அறிவித்து செல்கிறார்" என்றார். "நல்லது தந்தையே! ரஹ்மான் தங்களுக்கு நல்லதையே செய்வான்! ஏனெனில் நாம் சத்தியப் பாதையில் இருக்கிறோம்! அதனால் முடிவைப் பற்றி கவலைப்பட வேண்டியதில்லை. நாம் உலகாசைக்களுக்காக உலகில் வாழ்பவர்களில்லையே!" என்ற மகனின் ஞானம் நிறைந்த பேச்சைக் கேட்ட இமாமவர்கள் தம் மகனை கட்டித்தழுவி கண் கலங்கினார்கள். பயணம் முன்நோக்கி தொடர்ந்தது...

இனி ஒவ்வொரு கணமும் எச்சரிக்கையாய் இருக்க வேண்டும், திடீர் தாக்குதல் நடந்தால் ஒரே கூட்டமாய் அகப்பட்டு கொள்ள கூடாது, என தம் தோழர்களை சிறு சிறு பிரிவுகளாக்கி பரவி நின்று பயணத்தை தொடர்ந்தார்கள் இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு. இதற்கு தளபதி ஹுர் ஆட்சேபம் தெரிவித்து விவாதம் புரிந்து கொண்டிருந்த போது இப்னு ஸியாதிடமிருந்து ஒரு தூதுவன் கடிதம் கொண்டு வந்தான், அதில் இமாமவர்களை தண்ணீர் வசதி கொண்ட பகுதி மற்றும் கோட்டை சூழ்ந்த பகுதியில்லாமல், ஒரு திறந்த வெளியிலே தங்க அனுமதிக்க வேண்டும். மேலும் இந்த ஒற்றன், உமது (ஹுர்ரின்) நடவடிக்கையை கண்காணிக்கும் பொருட்டு உம்மை பின்தொடர்வான் என்றும் குறிப்பிடப்பட்டிருந்தது!

## தண்ணீர் கொடுத்துதவிய இமாம்...

உபைதுல்லாஹ் இப்னு ஸியாதிடமிருந்து வந்த கடிதத்தை இமாமவர்களிடம் வாசித்து காண்பித்த ஹுர், "இனி உங்களிடம் கண்டிப்பாய் நடந்து கொள்ளாமல் இருக்க முடியாது" என்றார். பயணம் சிறிது தூரம் முன்னோக்கி சென்றதும், ஹுரின் அணியை சார்ந்த படை வீரர்கள் பலபேர் திடீரென்று மயங்கி விழுந்தனர். அதைப் பார்த்த இமாமவர்கள் காரணம் வினவ, "எங்களிடம் தண்ணீர் தீர்ந்து விட்டது. நா வறட்சி தாங்காது மயங்கி விழுகிறார்கள்" என சோகக்குரலில் கூறினார் ஹுர். கருணை கண்மணியான இமாமவர்கள் தம் தோழர்களிடம் "நம்மிடம் இருக்கும் தண்ணீரை இவர்களுக்கு கொடுத்து உதவுங்கள்" என்றார். "இவர்களெல்லாம் நமது பகைவர்கள் அல்லவா?" என கேட்கப்பட்டதற்கு "இப்போது ஒரு மனிதன், இன்னொரு மனிதனுக்கு ஆற்ற வேண்டிய கடமையை தவிர வேறேதும் எண்ணுவதற்கில்லை" என்றார்கள். இதுதான் சமயம் எதிரிகளை வீழ்த்தி விடலாம் என்று கூறியதைக் கேட்ட இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு "நம் பரம்பரையில் யாரும் எதிரிகளின் முதுகில் குத்தி நான் பார்த்ததில்லை" என்றார்கள்.

தண்ணீர் குடித்து விட்டு மயக்கம் தெளிந்த எதிரிகள் மீண்டும் அதிகமாகவே தொந்தரவுகளை கொடுத்தனர். ஜுஹீர் ரஜியல்லாஹு அன்ஹு இமாமவர்களிடத்தில் வந்து எதிரிகள் மேலும் மேலும் வந்து கொண்டிருக்கின்றனர், எனவே இந்த சிறிய படையை தாக்கி விட்டு, வழியில் உள்ள புராத் நதி அருகே உள்ள கோட்டை சூழ்ந்த அக்ர் என்ற ஊரில் பாதுகாப்பாக தங்கிக் கொள்ளலாம் என்றார். அதற்கு இமாமவர்கள், "முதலில் நாம் தாக்கியதால் தான் பிரச்சினை முற்றிவிட்டது என்ற அவலப் பெயர் வேண்டாம், அல்லாஹ் அக்ரிலிருந்து (துன்பம்) நம்மை பாதுகாப்பானாக!" என்றார்கள். பயணம் முன்னோக்கி தொடர்ந்தது...

ஹிஜ்ரி 61ம் வருடம் முஹர்ரம் மாதம் 2ம் நாள், அஹ்லுல் பைத்துகள் ஒரு வறண்ட பாலைப் பகுதியை அடைந்தார்கள். அங்கே வீசிய காற்றில் இரத்த மணம் கலந்திருந்ததை உணர்ந்த இமாமவர்கள், அப்பகுதியின் பெயரை விசாரித்ததில் "கர்பலா" (கர்புன் வ பலாவுன் - துன்பமும் சங்கடமும்) எனத் தெரிய வந்ததும், தாம் சரியான இடத்திற்கு வந்து விட்டதாக இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு கூறினார்கள். இமாமவர்களே! இங்கே தங்காதீர்கள்... தங்காதீர்கள் என வானமும், பூமியும், காற்றும், மேகமும் மானசீக குரலில் அலற, அலற பொருட்களை இறக்கும் படியும், கூடாரங்களை விரிக்கும் படியும் இமாமவர்கள் கட்டளையிட்டார்கள்.

சற்றும் நிழலில்லாத கொதி மணற்பரப்பு கொண்ட திறந்த பாலைவெளி, புராத் நதியிலிருந்து சற்றுத் தூரமாய் இருந்தது. எனவே ஹுர்ரும் எந்த வித எதிர்ப்பையும் தெரிவிக்கவில்லை. இமாமவர்களின் சகோதரி உம்முகுல்தூம் ரஜியல்லாஹு அன்ஹா இமாமவர்களை நோக்கி, சகோதரரே! நாம் இன்னும் வசதியான இடத்தில் கூடாரம் அமைப்பது நல்லதில்லையா? எனக் கேட்டார்கள்.

தம் சகோதரியை பரிவுடன் நோக்கிய இமாமவர்கள், " ஒரு யுத்த களத்திநின்று திரும்பி வந்துக் கொண்டிருக்கையில், இதே இடத்தில் தான் நானும், சகோதரர் இமாம் ஹஸனும் (ரஜியல்லாஹு அன்ஹு), நமது தந்தையும் தங்கினோம். நமது சகோதரரின் தொடையில் தலை வைத்து படுத்துறங்கிய நம் தந்தை, திடுக்கெட்டு எழுந்தார்கள். காரணம் வினவிய போது, தம்பி ஹுஸைன் (ரஜியல்லாஹு அன்ஹு) இவ்விடத்தில் இரத்த வெள்ளத்தை நான் காண்கிறேன். உமக்கு உதவுபவரும் யாருமில்லை! அப்படியொரு

சம்பவம் உண்மையில் நேர்ந்தால் நீர் என்ன செய்வீர்? என என்னிடம் கேட்டார்கள். அதற்கு நான், அல்லாஹ்வின் சோதனை இறங்குமாயின், அவன் அறிவுறுத்தியுள்ள பொறுமையை பற்றிப் பிடிப்பேன். பாட்டனார் அவர்கள் வாழ்ந்து காட்டி, போதித்த சகிப்புத்தன்மையோடு முயற்சியை மேற்கொண்டு சோதனையிலிருந்து விடுபட முயற்சிப்பேன் என்றேன். என்ன சகோதரி என் பதில் சரியானது தானே?" என்றார்கள்.

"பதில் சரியானது தான், ஆனால் அல்லாஹ் உங்களுக்கு அத்துயர சம்பவத்தை கொடுக்காதிருப்பானாக! சகோதரரே..! நாங்கள் எல்லாம் உங்களை எவ்வளவு நேசிக்கிறோம் தெரியுமா?" என சொல்லிக் கொண்டிருக்கும் போதே சகோதரியின் கண்களிலிருந்து கண்ணீர் தாரை தாரையாய் வழிந்தோடியது.

### இராட்சஸனின் கடிதம்...

உபைதுல்லா இப்னு ஸியாதிடமிருந்து இமாமவர்களுக்கு ஒரு கடிதம் வந்தது. அதில், "யஜீதை கலீஃபாவாக ஏற்று பைஅத் (சத்தியப் பிரமாணம்) செய்து தர வேண்டும். அது உங்களுக்கு எளிமையானதே! இல்லையென்றால் உங்கள் தலையை கொய்து யஜீதுவுக்கு அனுப்புவது எங்களுக்கு எளிமையானதே!" என எழுதப்பட்டிருந்தது. தோழர்கள் என்ன விஷயம் என்று வினவ, "மனிதனுக்கு கடிதம் எழுதினேன். இராட்சஸனிடமிருந்து பதில் வந்திருக்கிறது. உலகத்திற்காக தன்னை விற்று விட்டவர்களுக்கு, தீனுக்காக தன்னை அர்ப்பணிப்பவர்களின் பாஷை ஒரு போதும் புரியாது" என்றார்கள். தூது கொண்டு வந்தவன், பதில் கடிதம் ஏதாவது கொடுக்க விரும்புகிறீர்களா? என்பதற்கு "உன் எஜமான் என்னிடமிருந்து பதில் பெறுகிற மாதிரி செய்தியை அனுப்பவில்லை" என்றார்கள்.

இமாமவர்களின் பதிலை அறிந்த உபைதுல்லா இப்னு ஸியாது, அதிக கோபம் கொண்டு, அஷ்ரத்துல் முபஷ்ஷரா எனப் புகழப்பட்ட சஹாபிகளில் ஒருவரான ஹஜ்ரத் ஸஅது இப்னு அபீவக்காஸ் ரஜியல்லாஹு அன்ஹு அவர்களின் மகனான அம்ரு இப்னு ஸஅதுவை, ஒரு பெரும்படைக்கு தளபதியாக்கி இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹுவை கட்டாய வழிக்கு கொண்டு வர வேண்டும் என்ற நிபந்தனையோடு அனுப்பி வைத்தான்.

உலகாசைக்கும், அஹ்லுல் பைத்துகளுக்கு செய்யப் போகும்

துரோகத்திற்கும் ஏற்படக்கூடிய இறைத் தண்டனையின் அச்சத்திற்கும் மத்தியில் மனம் குழம்பியவனாய் வந்த அம்ரு, “இமாமவர்களே! தங்கள் வருகையின் நோக்கம் என்ன?” என்று தூது அனுப்பியிருந்தான். அதற்கு இமாமவர்கள், “என் நோக்கம் இரகசியமானதல்ல, கூஃபாவுக்கு வரும்படி நீங்களும் வேறு சிலரும் அழைத்திருந்தீர்கள், உங்களுடைய அழைப்பினை ஏற்று நானும் வந்துள்ளேன். உங்கள் அழைப்பில் உயிர் இருந்தால் நான் கூஃபாவுக்கு வருகிறேன். அது செத்துவிட்டதென்றால் புனித மதினாவிற்கு திரும்பி விடுகிறேன்” என்று பதில் அளித்தார்கள்.

இமாமவர்களின் பதிலில் நியாயம் இருந்ததை உணர்ந்த அம்ரு, உபைதுல்லா இப்னு ஸியாதுவுக்கு தகவல் அனுப்பினான். ஆனால் உபைதுல்லா, “ஹுஸைன் (ரஜியல்லாஹு அன்ஹு) தமது நல்லெண்ணத்தை கலீஃபா யஜீதுக்கு பைஅத் செய்து கொடுத்து காட்டட்டும், அந்த நல்ல பதில் வெளிப்படும் வரை அவருக்கு சிறிது தண்ணீரும் கூட கொடுக்காமல், நிர்பந்தத்தை ஏற்படுத்துங்கள்” என்ற கட்டளையை அனுப்பியிருந்தான்.

இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு அவர்களின் கட்டளைப்படி, 30 வீரர்களுடன் ஹஜ்ரத் அப்பாஸ் இப்னு அலீ ரஜியல்லாஹு அன்ஹு தண்ணீரை எடுக்க 20 தோல்பைகளுடன் புராத் நதி அருகே சென்றார்கள். ஆனால் நதியின் நீரை எடுக்க விட முடியாதபடி இபுனு ஹஜ்ஜாஜின் தலைமையில் எதிரிப்படைகள் தடுத்து நின்றது. தனது இரத்தம் சிந்தியாவது, தண்ணீரை எடுப்பேன் என்ற அப்பாஸ் ரஜியல்லாஹு அன்ஹுவைப் பார்த்து, மல்யுத்த வீரன் எனப்பெயர் பெற்ற இபுனு ஹஜ்ஜாஜ் தன்னுடன் மோதிப்பாரும், தோற்பவர் - ஜெயித்தவரின் செயலை ஏற்றுக் கொள்ளலாம் என்ற நிபந்தனையோடு களத்தில் இறங்கினான். அல்லாஹ்வின் சிங்கம் அலீயின் (கர்ரமல்லாஹு வஜ்ஜஹு) வீரத்தை, அவர்களின் புதல்வனிடத்தில் உணர்ந்த இப்னு ஹஜ்ஜாஜ் தோல்வியை ஒப்புக்கொண்டு, ஹஜ்ரத் அவர்கள் தனது தோற்பைகளில் நீரை எடுத்து செல்வதை வேடிக்கை பார்த்தான்.

கர்பலா மைதானத்தில், தமது கூடாரத்திலிருந்து சற்றே வெகு தொலைவில் பாளையமிட்டிருந்த அம்ருவை சந்தித்து பேச இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு விரும்பினார்கள், விருப்பம் தெரிவிக்கப்பட்டது. இருவரும் மைதானத்தின் நடுநிசிவில் தனிமையாக சந்தித்து கொண்டார்கள். “அம்ருவே நான் யார் என்று தெரியுமா?” என இமாமவர்கள் கேட்க, “ஆம் தெரியும், வீரர் அலீயின் (கர்ரமல்லாஹு வஜ்ஜஹு) புதல்வர். எங்கள்

ரஸுல்லாஹ்வின் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) திருப்பேரர்" என்றான் அம்ரு! இமாமவர்கள், "எல்லாம் தெரிந்தும், எனக்கும் என் மக்களுக்கும் தண்ணீர் கிடைக்க முடியாதபடி தடுத்து, தாகத்தால் நாங்கள் மடிகிற நிலைக்கு கொண்டு செல்ல முயலுகிறீர்களே! என்ன விசுவாசம்...! அம்ரே!"

"கூஃபாவுக்கு வரும்படி, நீ எனக்கு கடிதம் எழுதவில்லையா? எனக்கு பைஅத் செய்து தருவதாக வாக்கு கொடுக்கவில்லையா?" என்றதும் அம்ரு நாணிக்குறுகினான்.

"இமாமவர்களே...! நீங்கள் சொல்வதெல்லாம் உண்மைதான்! ஆனால் எனக்கு ஊரில் நிறைய நிலபுலம் இருக்கிறது, மனைவி மக்கள் இருக்கிறார்கள். நான் உங்களுடன் சேர்ந்துக் கொண்டால், எல்லாவற்றையும் இழக்க வேண்டி வருமே! உபைதுல்லா இப்னு ஸியாது அப்புறம் என்னை பரதேசியாக ஊரை விட்டே துரத்தி விடுவான்" என்றான் அம்ரு. அதற்கு இமாமவர்கள், "உமது வீடு இடிக்கப்பட்டால் நான் புதுப்பித்து தருகிறேன், உமது நிலபுலம் பறிக்கப்பட்டால் ஹிஜாஸிலுள்ள எனது சொத்துக்களை கொண்டு ஈடு செய்கிறேன். அம்ரே! நீ பெரிதுபடுத்துகிற செல்வங்களை யெல்லாம் ஈடு செய்யக்கூடியவையே! ஆனால் ஈடு செய்ய முடியாத; பரிகாரம் காண முடியாத சில காரியங்கள் இருக்கிறது! அதைப் பற்றி பயந்து கொள்ளும்" என்றார்கள். அம்ரு எதற்கும் உடன்படாமல் உலகாசையிலேயே இருந்தான். கூஃபாவாசிகளின் மனநிலைக்கு அம்ரு ஒரு எடுத்துக்காட்டு. உலகாசை ஓங்கியவர்களில் நிறைய பேர் - பெயருக்கு முஸ்லிம்கள் என இருந்தனர்.

## மூன்று நிபந்தனைகள்...

மீண்டும் ஒரு நாள் அம்ருவை சந்தித்த இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு அவர்கள் மிகவும் உறுதியாய் "நான் யஜீதுவுக்கு பைஅத் செய்து கொடுப்பது என்பது நடக்காத காரியம்! எனவே சமாதானத்திற்கு போக மூன்று வழிகளை சொல்கிறேன் கேளுங்கள். 1. எங்களை புனித மதீனாவிற்கு செல்ல விடுங்கள், அல்லது 2. யஜீதுவை சந்திக்க எனக்கு வழிவிடுங்கள், அல்லது 3. வேறு ஏதாவது நாட்டிற்கு செல்ல எங்களுக்கு அனுமதியுங்கள்", என கூறினார். இது நல்ல யோசனையே! என்ற அம்ரு உடனடியாக கடிதம் மூலம் அச்செய்தியை உபைதுல்லா இப்னு ஸியாதுவுக்கு அனுப்பினான்.

**ஷிம்ரு சனியன்...**

அஹ்லுல் பைத்துகளுக்கு எதிரானவர்கள், இஸ்லாத்தின் மீது காழ்ப்புணர்ச்சி கொண்டவர்கள், உலகாசை செல்வங்களே நிரந்தர சுகம் தரக்கூடியவை என்றவர்கள், இஸ்லாமிய மார்க்கத்தில் இருந்து கொண்டே அற்ப சுகங்களுக்காக மார்க்கத்தையே பிறழ்ந்து வாழ்கிறவர்கள் எல்லாம் ஒன்று கூடி ஆலோசித்து யஜீதுக்கும், உபைதுல்லாஹ் இப்னு ஸியாதுக்கும், ஷிம்ரு இப்னு தில்ஜோஷனுக்கும் ஒரு முடிவைத் தெரிவித்தனர். அம்முடிவின் படியே! யஜீது, உபைதுல்லா இப்னு ஸியாதிற்கு கட்டளையிட, அவன் ஷிம்ருவை அழைத்து மேலும் ஒரு படைப்பிரிவை கொடுத்து, "ஷிம்ருவே! அம்ரு என் கட்டளைப்படி நடந்தால் சரி, இல்லையென்றால் அவரைப் பதவியிலிருந்து அகற்றிவிட்டு படைகளின் தலைமைப் பொறுப்பை நீ ஏற்றுக் கொள். ஹுஸைனுக்கும் (ரஜியல்லாஹு அன்ஹு) அவரது கூட்டத்தாருக்கும் ஒரு சொட்டுத் தண்ணீர் மற்றும் உணவு கிடைக்க வழியில்லாமல் செய்து விடு. அப்புறம் நிர்பந்தத்தால் பைஅத் செய்து கொடுக்க அவர்கள் முன் வருவார்கள். ஒருவேளை அதற்கும் வழியில்லையென்றால் ஹுஸைனின் (ரஜியல்லாஹு அன்ஹு) தலையை கொய்து எனக்கு அனுப்பி வை" என அதிகாரமளித்து, கர்பலாவை நோக்கி அனுப்பி வைத்தான்.

இப்போது உணவு, தண்ணீர் போன்றவை இமாமவர்களுக்கும், அந்த நட்சத்திர கூட்டத்தாருக்கும் கிடைக்க முடியாத படி எல்லா வழிகளையும் அடைத்து விட்டனர் எதிரிகள். புராத் நதியின் மேற்கு புறத்திலும் காவலாளிகள் பலப்படுத்தப்பட்டனர். ஷிம்ரு தனது மாமியின் மக்கள் நால்வர்கள் இமாமவர்களுடன் இருப்பதை அறிந்து, அவர்களை அழைத்து "ஹுஸைனின் (ரஜியல்லாஹு அன்ஹு) வீண் பிடிவாதம் அவரது உயிருக்கு உலை வைத்துவிடும்! அவர் விதியை அவர் அனுபவிக்கட்டும். நீங்கள் ஏன் அநியாயமாய் பலியாக வேண்டும்! என்னுடன் வந்து விடுங்கள்" என்றான். அதற்கு அவ்வீர மக்கள் "ஈருலக நாயகரின் அருமைப் பேரர் - சொர்க்கத்தின் தூணான இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு அவர்களை எப்படியாவது போகட்டும் என்று சொல்லி விட்டு, எங்களை காப்பாற்ற துடிக்கிறீரோ? உமக்கு வெட்கமில்லை!" என்று முகத்திற்கு முகமாக சாட்டையடி கொடுத்து திரும்பி விட்டனர்.

போர் மூளும் சூழலில் எதிரிகளிடம் சென்று

பேசிப்பார்க்கலாம், ஏதாவது மனம் திருந்தினால் நல்லதுதானே! நாளைக்கு அல்லாஹ்வின் தண்டனையிலிருந்து தப்புவதற்கு வழி கிடைக்குமே இவர்களுக்கு! என்ற நல்லெண்ணத்துடன் ஹஜ்ரத் ஜஹீரும், ஹஜ்ரத் ஹபீப் இப்னு முஸாஹிரும் (ரஜியல்லாஹு அன்ஹும்) எதிரிகளின் அணிப்பக்கம் சென்று, "மனித குலத்திலேயே மகா கேடு கெட்டவன், நபிகளாரின் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) மக்களது இரத்தத்தில் தன் கைகளை கறைப்படுத்தி கொண்டவனே! உங்கள் கண்களை குருடாக்கி கொண்டு, அப்புறம் வெளிச்சத்திற்காக அலையாதீர்கள்! நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் சந்ததியினரை விட (அஹ்லுல் பைத்துகள்) வேறு எந்த உயர் மக்களையும் அல்லாஹ் இந்த பூமி மீது வைத்திருக்கவில்லை. இருண்ட இரவுக்கு சந்திர நட்சத்திரங்கள் ஒளி தருகின்ற மாதிரி மனித வாழ்வை ஒழுங்குபடுத்தி உன்னதமாக்குவதற்காக கிருபையுள்ள ரஹ்மான், நம்மிடையே இவர்களை மலரச் செய்திருக்கின்றான். ஈடேற்றம் என்ற பற்றிப்பிடிப்பு இவர்களிடமே உள்ளது. இவர்களைப் பற்றி பிடித்துக் கொள்கிறவர்கள் மாத்திரமே நூஹ் (அலைஹிஸ் ஸலாம்) நபியின் கப்பலைப் போன்று கரைச் சேர்க்கப்படுவார்கள். இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு அவர்களைப் பார்த்ததும், அவரின் பாட்டனார் ( ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) இமாமவர்களின் மீது வைத்திருந்த பேரன்பே! எங்கள் நினைவுக்கு வந்தது! நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் பேரருக்காக போராடியவன் என்ற தகுதி மாத்திரம்; எங்களுக்கு கிடைக்குமானால் ஒரு தடவை அல்ல, ஆயிரமாயிரம் தடவை - நாங்கள் செத்து மடிய தயாராகயிருக்கிறோம்!" என்ற தங்களின் உள்ள உணர்ச்சியை காட்டிய போதும், எதிரிப்படையில் உள்ளவர்கள் உணர்ச்சியற்ற சடலங்களாகவே நின்றிருந்தனர்.

### புனித ஆஷூரா இரவு...

ஹிஜ்ரி 61ம் வருடம் முஹர்ரம் 9ம் நாள் (6 October 680AD) பிற்பகல் நேரத்தில் போர் முரசு கொட்டும் சத்தம், எதிரிகளின் புறத்திலிருந்து வருவதை உணர்ந்த இமாமவர்கள். ஹஜ்ரத் அப்பாஸ் இப்னு அலீ ரஜியல்லாஹு அன்ஹு அவர்களை அழைத்து, "இன்று ஆஷுரா இரவு, பாவ மன்னிப்புக்கள் ஏற்றுக் கொள்ளப்படும் புனித இரவு, தம்பி... இது எனக்கு கடைசி இரவாகவும் இருக்கலாம்! மலை போன்ற என் பாவங்களை, அல்லாஹ்விடம் மனமுறுகி வேண்டி, கண்ணீர் கரைக்க விரும்புகிறேன். இந்த ஓர் இரவை மட்டும் அடையக்கூடிய பாக்கியத்தை மீட்டுத் தர முயற்சி செய்யவும்" என்றார்கள். அப்பாஸ் ரஜியல்லாஹு அன்ஹு,

இமாமவர்களின் இறை வணக்க ஆர்வத்தை எதிரணியினரிடம் தெரிவித்து விட்டு, மறுநாள் காலை சண்டையைத் துவக்கலாம் என அம்ருவிடம் யோசனையை கூறினார்கள்.

“நாங்கள் சகலவித ஏற்பாட்டுடன் போரைத் துவக்க வந்து விட்டோம், சண்டையை ஒத்திப் போடுவது இயலாத காரியம்” என்றான் அம்ரு. முன்பு அப்பாஸ் ரஜியல்லாஹு அன்ஹு அவர்களிடத்தில் மல்யுத்தம் செய்து தோற்றுப்போன இப்னு ஹஜ்ஜாஜ், “கடந்த மூன்று நாட்களாக உணவு - தண்ணீரின்றியுள்ள நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் பேரர்; இறைவணக்கத்திற்காக ஓர் இரவை தவணை கேட்கிறார். நாம் அதை மறுத்து அநியாயம் செய்கிறோம். நாமெல்லாம் முஸ்லிம்கள் தானா?” என்று அம்ருவிடம் கேட்டதும், அம்ரு தலைக்குணிந்து அப்பாஸ் ரஜியல்லாஹு அன்ஹு அவர்களின் யோசனையை ஏற்றான்.

வயிற்றுக்கும் - மனதிற்கும் இடையே போராட்டம் நடத்திக் கொண்டு, நெஞ்சத்தை இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு அவர்களிடத்திலும், புத்தியை யஜீதிடத்திலும் வைத்துக் கொண்டு திண்டாடிய சில பேரும் யஜீதுவின் படையணியில் இருந்தார்கள் என்பதற்கு இப்னு ஹஜ்ஜாஜ் ஓர் உதாரணம்.

அன்றைய மாலைப் பொழுதில், கூஃபாவின் திசையிலிருந்து கால்நடையாய் வந்த இளம் தம்பதியினரான அப்துல்லா இப்னு அம்ருல் கல்பீ - உம்முவஹப் (ரஜியல்லாஹு அன்ஹும்) இமாமவர்களை நோக்கி, “நாயகமே! எங்கள் உயிர்கள் தங்களுக்கு அர்ப்பணமாகட்டும். நானும் என் மனைவியும் மரணிக்காதவரை, நீங்கள் யுத்தக்களம் புகக் கூடாது. உங்களை காக்கும் பொருட்டு நாங்கள் எதையும் சகித்துக் கொள்வோம். நாங்கள் உயிருடன் இருக்கும் வரை நீங்கள் சண்டை போடக் கூடாது” என்று கூறி இமாமவர்களின் அணியில் சேர்ந்துக் கொண்டனர்.

### அலாவ நெருப்பு…

இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு அவர்களின் உத்தரவில், சண்டை நடக்கும் சமயத்தில் பெண்களையும் குழந்தைகளையும் காக்கும் பொருட்டு முன்னெச்சரிக்கை நடவடிக்கையாக, கூடாரங்களை சுற்றி அகழ் தோண்டி அதில் நெருப்பு வளர்க்கப்பட்டது.

மஃரிப் தொழுகையை முடித்த இமாமவர்கள் கூடாரத்தின் வெளியே அமர்ந்து, வானைப் பார்த்தவாரே யோசனையில் மூழ்கினார்கள். அந்த சமயத்தில், தாகம்!...தாகம்!... என்ற குழந்தைகளின் தவிப்பும், பொறுமை...பொறுமை... என தாய்மார்களின் சமாதானமும், யா ரஸூலல்லாஹ்...! யா அல்லாஹ்...! எங்களை காப்பாற்றுங்கள் என கூடாரத்திலிருந்து வந்த கூப்பாடுகளுடன், எதிரிப்படையில் கத்தி, வாட்கள் தீட்டுகிற சத்தம் போன்றவற்றை கேட்டுக் கொண்டவர்களாகவே சிந்தனையில் இருந்தார்கள். தமக்காக சகல நலங்களையும், தியாகம் செய்யச் சித்தம் கொண்டுள்ள தமது ஆதரவாளர்கள் பற்றி நினைக்கையில் இமாமவர்களுக்கு துக்கம் மேலும் அதிகரித்தது!

எனவே இமாமவர்கள், தன் தோழர்கள் மற்றும் ஆதரவாளர்களை அழைத்து, “இப்போது எதிரிகளுக்கு நான் தான் குறி, என் தலைதான் அவர்களுக்கு லட்சியம், எனவே அவர்களுக்கு தேவைப்படாத, எனக்காக தியாகம் செய்பவர்களாகிய நீங்கள், அவர்களுக்கு பலியாக வேண்டியதில்லை எனவே என் யோசனையை ஏற்று ஊருக்கு திரும்பி விடுங்கள்” என்றார்கள். இதனைக் கேட்டு கூடியிருந்தோர் அனைவரும் “எங்கள் நாயகம் ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லமவர்களின் திருப்பேரரே! உங்களை விட எங்களின் உயிரும் உடைமைகளும் எங்களுக்கு பெரிதாகி விடுமா? நாங்கள் இறந்தாலும் உங்களுடனேயே இறப்போம், நாங்கள் வாழ்ந்தாலும் உங்களுக்காகவே வாழ்வோம் இது உறுதி” என்றனர்.

## காலத்தின் கோலம்...

“காலமே...! உன் கரங்களால் காலையையும், மாலையையும் ஒவ்வொரு நாளும் கொலை செய்து கொண்டிருக்கிறாய். ஒவ்வொரு ஜீவனும் மரணத்தை நோக்கி நகர்கிறது. அல்லாஹ்வின் நாட்டத்திலேயே எல்லாம்!” என்ற அர்த்தமுள்ள கவிதையை, சிறந்த கவிதை ஞானம் கொண்ட இமாமவர்கள் பாடக்கேட்டு, உடல்நலமில்லாமல் இருந்த ஹஜ்ரத் ஜைனுல் ஆபிதீனுக்கு (ரஜியல்லாஹூ அன்ஹூ) சிகிச்சையளித்து கொண்டிருந்த ஹஜ்ரத் ஜைனபின் (ரஜியல்லாஹூ அன்ஹூமா) கண்களிலிருந்து கண்ணீர் வழிந்தோடியது! ஹஜ்ரத் ஜைனுல் ஆபிதீன் ரஜியல்லாஹூ அன்ஹூ தன் மாமியைப் பார்த்து, “இத்துன்பம் நம்மை விட்டு அகலாதா?” எனக் கேட்டதும், அம்மையார் அவர்கள் கதறி அழ ஆரம்பித்து விட்டார்கள். இதைப் பார்த்த மற்றவர்களும் உணர்ச்சி ததும்ப அழுதனர்.

இமாமவர்கள் தம் சகோதரியை நோக்கி, "நாம் ரஸூலல்லாஹ் ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லமவர்களின் குடும்பத்தினர் அல்லவா? ஃபாத்திமா (ரஜியல்லாஹூ அன்ஹூமா) அவர்களின் உதிரக் கட்டிகள் அல்லவா? துன்ப துயரங்களை எத்தனை பொறுமையுடன் அவர்கள் சகித்துக் கொண்டார்கள் என நாம் எண்ணிப் பார்க்க வேண்டாமா...? அல்லாஹ் நமக்களித்த பொறுமையை - சகிப்புத்தன்மையை கடைப்பிடிக்க வேண்டாமா...?" என்று கூறி சமாதானப்படுத்தினார்கள்.

இமாம் ஹூஸைன் ரஜியல்லாஹூ அன்ஹூ அவர்கள், அந்த ஆஷூரா இரவு முழுவதும் தமது கூட்டத்தாருடன், தொழுவதிலும், திருக்குர்ஆனை ஓதுவதிலும், ஜிக்ரிலும் மிகவும் இன்பமாக தங்களுடைய பொழுதை கழித்தார்கள். எதிரிகள் தங்களது வாட்களை கூர்ப்படுத்துவதில் செலவிட்ட நேரத்தை, அஹ்லுல் பைத்துகளான நபிகளாரின் குடும்பத்தார் தங்களது ஆன்மாவை அழகுபடுத்தினார்கள்... பொழுது விடிந்தது... இமாமவர்கள் பாங்கு ஒலிக்க கட்டளையிட்டதும் ....பாங்கு ஒலிக்கப்பட்டது...அதில், அஷ்அஹது அன்ன முஹம்மதுர் ரஸூலுல்லாஹ் (ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம்) என்ற வாக்கியம் வெளிப்பட்டதும், மனித வாழ்க்கை முறையை சீர்ப்படுத்தி, அல்லாஹ் ஒருவனே "ரப்" என காட்டிக்கொடுத்த வள்ளல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லமவர்களின் பேரரையா கொலை செய்ய போகிறீர்கள்? பாவிகளே! உங்களை நாங்கள் சபிக்கிறோம் என வானமும், பூமியும், காற்றும், பறவையினங்களும், புற்பூண்டுகளும் மோனக்குரலில் எதிரிகளை சபித்தன.

## ஃபஜ்ரு தொழுகையும், போர் முரசும்...

இமாம் ஹூஸைன் ரஜியல்லாஹூ அன்ஹூ அவர்களின் தலைமையில் அஹ்லுல் பைத்துகள், அந்த வெள்ளிக் கிழமை ஃபஜ்ர் தொழுகையை முடித்துக் கொண்டிருக்கும் போதே, எதிரிகள் போர் முரசை வேகமாக கொட்டிக் கொண்டு சண்டைக்கு தயாராக அணிவகுத்து நின்றார்கள். தொழுகையை முடித்த பிறகு இமாமவர்களும், இமாமைச் சார்ந்த சிறு கூட்டத்தாரும் வலது, இடது அணியாக பிரிந்து நின்றனர். இஸ்லாத்தின் கொடியை ஹஜ்ரத் அப்பாஸ் இப்னு அலீ ரஜியல்லாஹூ அன்ஹூ அவர்கள் கையில் உயர்த்தி பிடித்து நின்றார்கள்.

பெண்களையும், குழந்தைகளையும் காக்கும் பொருட்டு

நெருப்பு வளர்க்கப்பட்டிருந்ததை, சுற்றிப் பார்த்த இமாமவர்கள் நெருப்பை மேலும் கிளறி விடும் படி கட்டளையிட்டார்கள். இமாமவர்களின் சிறு கூட்டத்தையும், கூடாரங்களையும் மேலும் நெருப்பு வளர்க்கப்பட்டிருந்ததையும் ஏகத்தாளமாய் பார்த்துக் கொண்டிருந்த ஷிம்ரு தில்ஜோஷன் திமிராக இமாமவர்களைப் பார்த்து, “ஓய் இமாமே! இதெல்லாம் என்ன? மறுமை நாள் வருவதற்கு முன்னரே, நெருப்பில் விழுந்து விட்டீரா?” என்றதும், இமாமின் அணியை சார்ந்தவர்கள் “உனக்குத்தான் நரகம் மிக பொருத்தமான இடம்” என்றனர்.

ஹஜ்ரத் முஸ்லிம் இப்னு ஊலஜா ரஜியல்லாஹு அன்ஹு, ஷிம்ருவை வீழ்த்தி விட இமாமவர்களின் அனுமதியைக் கோரினார்கள். அதற்கு இமாமவர்கள், “சில போர்க்களங்களில் பரம துரோகிகளான சில எதிரிகளை என் பாட்டனாரும், அவர்களைப் பின்பற்றி என் தந்தையாரும் மன்னித்து விட்டிருக்கிறார்கள். அது சாதரண முன் மாதிரி அல்ல, அதை நான் பின்பற்ற விரும்புகிறேன், அதனால் அவனை விட்டுவிடும்” என கருணைமயமான இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு அவர்கள் கட்டளையிட்டார்கள். பின்பு அல்லாஹ்விடம் கையேந்தி “என் ரப்பே! எங்களைப் பார்த்து இவர்கள் (எதிரிகள்) சிரிக்கிறார்கள், கேலி செய்கிறார்கள். நான் உன்னிடமே உதவி கேட்கிறேன். சர்வ சக்தன் நீயே! நல்லுதவி அனைத்தும் உன்னிடமிருந்தே வருகின்றன” என இறைஞ்சினார்கள்.

## போர்களத்தில் உபன்யாசம்...

செஞ்சிங்கமாய் குதிரையில் ஏறி, எதிரிகளின் பக்கம் சென்ற இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு அவர்கள், “மக்களே! சண்டைக்கு அவசரப்படாதீர்கள், நான் இங்கு வந்த காரணத்தை சொல்கிறேன். அதில் நியாயம் இருப்பின், நீங்கள் சண்டையிலிருந்து ஒதுங்கிக் கொள்ளுங்கள். அநியாயம் இருப்பின் நீங்கள் எல்லாம் ஒன்று சேர்ந்து என்னை தாக்குங்கள். நான் அல்லாஹ்விடமே! நம்பிக்கையை வைத்திருக்கிறேன்” என்றார். இதைக் கேட்ட அஹ்லுல் பைத்து பெண்கள் கதறி அழுதனர். இமாமவர்கள், ஹஜ்ரத் அப்பாஸ் மற்றும் தன் மகனாரை (ரஜியல்லாஹு அன்ஹும்) அனுப்பி, “அவர்களை (தமது வீட்டுப் பெண்களை) சமாதானப்படுத்துங்கள், இன்னும் நிறைய அழ வேண்டியிருக்கிறது!” என்றார்கள்.

பேச்சை தொடர்ந்த இமாமவர்கள், “ஓ... மக்களே!

என்னுடைய வம்சாவழியை நினைத்துப் பாருங்கள்! என்னை கொன்று விட்டு, நீங்கள் எல்லாவற்றையும் இழக்க துணிந்து விட்டீர்களா? நான் உங்கள் மாநபியின் - மகளின் மகனல்லவா? அவர்களது சிறிய தந்தையின் மகனின் மகனல்லவா? ஷுஹதாக்களின் தலைவரான ஹம்ஸா (ரஜியல்லாஹு அன்ஹு), என் தந்தையின் சிறிய தந்தையல்லவா? துல்ஜனாஹைன் எனப் போற்றப்பட்ட ஜாஃபர்தையார் (ரஜியல்லாஹு அன்ஹு) என் தந்தையின் உடன் பிறப்பல்லவா? மாபெரும் ஞானி ஹஸன் ரஜியல்லாஹு அன்ஹு என் சகோதரரல்லவா? மாநபியின் பேரர்களாகிய நாங்கள் (அண்ணன் ஹஸன் ரஜியல்லாஹு அன்ஹுவும்) சொர்க்கத்து இளைஞர்களின் தலைவர்கள் என, என் பாட்டனார் அவர்கள் கூறியதை மறந்து விட்டீர்களா? இம்மண்ணகத்தில் என்னை விட்டால், உங்கள் மாநபியின் நேரடி வாரிசு எனச் சொல்லிக் கொள்ள யாரும் கிடையாது! நான் சொல்வதில் ஏதேனும் சந்தேகம் உங்களுக்கிருந்தால், உங்களிடையே வாழும் பெரியார்களிடமும், அன்ஸாரிகளிடமும், முஹாஜிர்களிடமும் கேட்டுப் பாருங்கள். நான் கருவாகிய நாள் முதல் உண்மையே பேசி வருகிறேன்! நான் உங்களில் யாருக்கு என்ன தீங்கு செய்தேன்? எவரை வெட்டி வீழ்த்தினேன்? எவர் பொருளை அபகரித்தேன்? ஏன் இப்படி எங்களை தண்ணீர், உணவு இன்றி கஷ்டப்படுத்தி விட்டு, எங்களிடம் சண்டை போடுவதற்கு துடிக்கிறீர்கள்?"

"ஓ... கூஃபாவாசிகளே! (என சில பெயர்களை அழைத்து) நீங்கள், எனக்கு கடிதம் போட்டு அழைக்கவில்லையா? எங்களுக்கு ஆதரவு தருகிறோம் என்று வாக்களிக்கவில்லையா?" என்றதும் அமைதி நிலவியது. பெயரழைத்து கூப்பிட்டவர்களில் ஒருவன், "அப்படியெல்லாம் நாங்கள் கடிதம் போட்டு உங்களை அழைக்கவில்லை" என்றான். சுபுஹானல்லாஹ்! என்று வியந்து நின்ற இமாமவர்கள், "அப்படியானால் நான் புனித மதீனாவிற்கே திரும்பி விடுகிறேன் எனக்கு வழிவிடுங்கள்" என்றார்கள்.

கைஸ் இப்னு அஷ்அத் என்பவன் இமாமவர்களைப் பார்த்து, "நீங்கள் யஜீதிடம் சரணடையுங்கள், அவருக்கு பைஅத் செய்து கொடுங்கள், நீங்கள் யஜீதால் நன்றாக நடத்தப்படுவீர்கள்" எனச் சொன்னான். "முஸ்லிம் இப்னு அகீலைத் (ரஜியல்லாஹு அன்ஹு) தவிர இன்னொரு கொலைக்காக; பனீ ஹாஷிம் கிளையாரை உங்களிடம் பழி தீர்க்க இடம் கொடுக்காதீர்கள். நான் ஒரு போதும் யஜீதிடம் சரணடைய முடியாது" எனக் கூறி தம் குதிரையை தட்டிவிட்டு, தமது கூட்டத்தினரிடம் வந்து சேர்ந்தார்

இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு!

## அல்லாவின் பரிசோதனை...

இமாமவர்களின் இளகிய எண்ணங்களை புரிந்து கொள்ளாத கூஃபாவாசிகளிடம், நான் ஒரு முறை பேசிப் பார்க்கின்றேன் என தளபதி ஜுஹீர் (ரஜியல்லாஹு அன்ஹு), இமாமவர்களின் அனுமதி பெற்று எதிரிப்படைகளின் முன்னால் சென்று, “ஓ...கூஃபாவாசிகளே! இந்த நிமிடம் வரை, நாம் அனைவரும் ஒரே மார்க்கத்தினராகவும், ஒரே வழியில் நடப்பவராகவும் இருக்கிறோம். இந்த நிலைமை மாறுவதற்கு, உங்கள் வாட்களை எடுத்து காரணமாகி விடாதீர்கள். அஹ்லுல் பைத்துகளின் விஷயத்தில் - நமது ஈமானை அல்லாஹுதஆலா பரிசோதிக்கிறான். நாங்கள், உங்களை அஹ்லுல் பைத்துகளை நேசிப்பதன் பக்கத்திலும், உபைதுல்லா இப்னு ஸியாது போன்ற கயவர்களிலிருந்து தூரமாக்கி வைப்பதற்கும் அழைக்கிறோம். இந்தக் கயவர்களின் ஆட்சியால் உங்களுக்கு எந்த ஒரு நன்மையும் விளையப் போவதில்லை. மாறாக, நல்லவர்கள் ஒவ்வொருவரும் பொறுக்கியெடுத்து ஒன்றன் பின் ஒன்றாக கொலை செய்யப்படுவீர்கள். இதுவரை நடந்துள்ள படுகொலைகளே இதற்கு போதுமான ஆதாரமாகும்” என்றார்கள். ஆனால் கூஃபாவாசிகளோ, ஜுஹீரை கேலிச் செய்யும் நோக்கமாக ஊ....ஊ... என்று கத்தி ஊளையிட்டு சிரித்தார்கள்.

## படைத் தளபதியின் மனமாற்றம்...

இதையெல்லாம் பார்த்து, மனம் நெகிழ்ந்த எதிரிகளின் படைத்தளபதி ஹுர் மனம் மாறி, “நான் சொர்க்கத்தை தேர்ந்தெடுத்து கொண்டேன். நான் துண்டு துண்டாக வெட்டப் பட்டாலும் சரியே! சொர்க்கத்து வழி தெரிந்து கொண்ட என் குதிரையே விரைந்து செல்” என இமாமவர்களிடம் வந்து, “இவர்களின் அநாகரீகத் திட்டம் முன்பே எனக்கு தெரிந்திருக்குமாயின், ஒருபோதும் இப்படியெல்லாம் நான் நடந்திருக்க மாட்டேன்; எப்படியேனும் சமாதானத்திற்கான வழி கிடைத்துவிடும் என நம்பியிருந்தேன் இமாமவர்களே!, என்னை மன்னித்து விடுங்கள். தங்களுக்கு எதிராக வாளை, நான் இனி ஒரு போதும் உயர்த்த மாட்டேன்” எனக் கூறி இமாமவர்களின் அணியில் சேர்ந்துக் கொண்டார்.

ஹுர் ரஜியல்லாஹு அன்ஹு இமாமவர்களிடத்தில்

சேர்ந்ததைக் கண்ட அம்ரு, ஸஃப்வான் என்ற வீரரை அனுப்பி ஹுர்ரை கொன்று விடுமாறு கட்டளையிட, ஹுர் ரழியல்லாஹு அன்ஹு லாவகமாக தப்பித்து, தமது ஒரே வில்லில் ஸஃப்வானை கீழே சாய்த்துவிட்டார்கள். எதிரிகள் அனைவரும் ஹுர்ரை (ரழியல்லாஹு அன்ஹு) தாக்க முயன்ற போதும், அவர்கள் அனைவரிடமிருந்து தப்பித்து இமாமவர்களின் அணியின் பக்கம் வந்து நின்றுக் கொண்டார்கள். தமது அணியிலேயே முதல் பலியாவதை தாங்க இயலாத அம்ரு, தங்கள் படைவீரர்களை நோக்கி, "நீங்களெல்லாம் சாட்சியாக இருங்கள்; நானே முதல் அம்பை எய்துகிறேன்" என்று இமாமை நோக்கி முதல் அம்பை எய்தி சண்டையைத் துவக்கி வைத்தான்.

## கர்பலா களத்தில் முதல் தியாகி...

ஹஜ்ரத் அப்துல்லாஹ் இப்னு அம்ருல் கல்பீ ரழியல்லாஹு அன்ஹு தாமே முதலில் சண்டைக்கு செல்ல இமாமவர்களிடத்தில் அனுமதி பெற்று சிங்கம் போல் தாவிக் குதித்துச் சென்று, மூன்று பெரிய பகைவர்களை முறித்துப் போட்டு விட்டு வந்தார். பின்னர் சென்ற முஸ்லிம் இப்னு உவாஜா ரழியல்லாஹு அன்ஹுவும் தம் பங்கிற்கு எதிரிகளை வேட்டையாடினார். இன்னும் அஹ்லுல் பைத்துகளில் ஒருவர் கூட உயிர் துறக்காத நிலையில், எதிரிகளின் புறத்தில் பிண எண்ணிக்கை அதிகரித்ததும், உர்வா என்பவன் ஹஜ்ரத் அவர்களை சூழ்ந்து நின்று தாக்குமாறு, தம் படைகளுக்கு கட்டளையிட்டான். வேகமாக சுழன்று எதிரிகளை தவிடு பொடியாக்கிய முஸ்லிம் ரழியல்லாஹு அன்ஹு நூற்றுக்கணக்கான ஈட்டிக்காயங்களை தம் உடம்பில் தாங்கி மூர்ச்சித்து விழுகிற நிலையில், யா ஹுஸைன்! என சத்தியது இமாமவர்களின் காதில் பட, வாளை வேகமாக சுழற்றியே படியே களத்தின் நடுவில் வந்த இமாமவர்கள், ஹஜ்ரத் அவர்களை தூக்கி தன் மடியில் கிடத்தினார். நாயகமே! கடைசிவரை என்னால், உங்களுக்கு பாதுகாப்பு அளிக்க முடியவில்லையே என முஸ்லிம் ரழியல்லாஹு அன்ஹு அழுதார்கள். அதற்கு இமாமவர்கள், "இல்லை, உங்களது பங்கை - நீங்கள் முழுமையாக்கி விட்டீர்கள்" என சொல்லிக் கொண்டிருக்கும் போதே ஹஜ்ரத் அவர்கள் கலீமாவை சொல்லியவாறே உயிர் துறந்தார்கள். கர்பலா களத்தில் சண்டையின் போது ஷஹீதான முதல் தியாகி இவர்கள்தான்.

இமாம் ஹுஸைன் ரழியல்லாஹு அன்ஹு அவர்களை எதிரிகளிடமிருந்து காக்கும் பொருட்டு, ஒவ்வொருவராய் தனித்தனியாக சென்று எதிரிகளின் படைகளை சிதறடிப்போம்

இல்லையென்றால் ஷஹாதத் என்னும் இறவா வாழ்க்கையை சுவைப்போம் என சூளுரை எடுத்துக் கொண்டு, ஹஜ்ரத் ஹபீப் இப்னு மஸாஹிர், ஹஜ்ரத் ஹ¬ர், ஹஜ்ரத் அப்துல்லா இப்னு உமைருல் கல்பீ, ஹஜ்ரத் ஜஹீர், ஹஜ்ரத் ஜாஃபரின் புதல்வர்கள், ஹஜ்ரத் ஹன்ஜலா பின் அஸ்அத், ஹஜ்ரத் அப்துல்லா இப்னு முஸ்லிம், ஹஜ்ரத் அலீ அக்பர், ஹஜ்ரத் அப்துல்லா இப்னு ஹஸன் மற்றும் தோழர்களாகிய படைவீரர்கள் (ரஜியல்லாஹ¬ அன்ஹ¬ம்) அனைவர்களும் எதிரிகளைடையே ஒருவர் பின் ஒருவராக சூறாவளியை போல் சுழன்று ஆயிரக்கணக்கானவர்களை கொன்று குவித்தனர். இறுதியில் சண்டையினால் ஏற்பட்ட களைப்பு மற்றும் மூன்று நாட்களாக சொட்டுத் தண்ணீர் கூட குடிக்காமல் இருந்ததனால் ஏற்பட்ட நாவறட்சியாலும் மயக்க நிலையை அடைந்தனர்.

சந்தர்ப்பங்களை பயன்படுத்தி எதிரிகள் அஹ்லுல் பைத்துகளையும், மற்ற வீரர்களையும் நயவஞ்சகமாகவே படைக்களத்திலும் கொலை செய்தனர். வீரர்கள் ஒவ்வொருவரும் கடைசி நேரத்தில் கூட, “ஒரு துளி தண்ணீரை யாராவது கொடுங்கள், அதற்கு பகரமாக இமாமவர்களின் எதிரிகளான ஓராயிரம் பேரின் தலைகளை கொய்து தருகிறேன்” என நாவறட்சியால் ஏற்பட்ட உடல் இயலாமையை வெளிக்காட்டினார்களே தவிர, அவ்வீரர்களிடையே வீரக்குறைவு ஏற்படவில்லை. ஒரு மடக்கு தண்ணீர் மட்டும் கிடைத்திருந்தால் கர்பலா களத்தின் போக்கே மாறியிருக்கும், அதாவது 72 நபரைக் கொண்ட இமாம் ஹ¬ஸைன் ரஜியல்லாஹ¬ அன்ஹ¬ அவர்களின் சிறு கூட்டம் 30,000 எதிரிகளை கூண்டோடு வீழ்த்தியிருக்கும் என வரலாற்றாசிரியர்கள் கருதுகின்றனர்.

## பச்சிளம் குழந்தைகளுக்கும் தண்ணீர் தடை...

கூடாரத்திலிருந்து தாகம்.. தாகம்.. என்ற பச்சிளம் குழந்தைகளின் அழுகைக் குரலினால் மனம் கலங்கிய ஹஜ்ரத் அப்பாஸ் இப்னு அலீ ரஜியல்லாஹ¬ அன்ஹ¬, புராத் நதி அருகே ஓடிச் சென்று நீரை தோற்பையில் நிரப்புவதை பார்த்த எதிரிகள், ஹஜ்ரத் அவர்களின் வலது கை, இடது கை என மாறி மாறி வெட்டினர். இருப்பினும் ஹஜ்ரத் அவர்கள், எதிரிகளிடம் “எனக்கு ஒரு வாய்ப்பை அளியுங்கள், தண்ணீரை கூடாரம் வரைக்கும் சேர்ப்பித்து வருகிறேன் பிறகு உங்களிடம் மோதுகிறேன்” என்று கூறி, வாயில் பிடித்துக் கொண்டு செல்லும் போது, எதிரிகள் நீர் நிரம்பிய தோற்பையை கிழித்தனர். பிறகு ஹஜ்ரத் அவர்களின் கழுத்தையும்

வெட்டி ஷஹீதாக்கினார்கள். இன்னாலில்லாஹி.....

இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு தன்னுடைய பச்சிளம் குழந்தை கடந்த 3 நாட்களாக தண்ணீர் மற்றும் பாலின்றி அவதிப்படுவதை எதிரிகளிடம் காண்பித்து சிறிது தண்ணீரை இமாமவர்கள் கெஞ்சிக் கேட்க, அதற்கு ஷிம்ரு தனது அம்பினால் அப்பச்சிளம் குழந்தையின் தொண்டையில் அம்பை செருகி மோசமான பதிலைக் கொடுத்தான். குழந்தை துடிதுடித்து ஷஹீதானதைப் பார்த்து இமாமவர்கள் பதறினார்கள்.

சிறுவராகிய ஹஜ்ரத் அலீ அஸ்கர் ரஜியல்லாஹு அன்ஹு அவர்கள் இஸ்லாத்தின் கொடியை கையில் பிடித்தவராய் நிற்க, இமாமவர்கள் செஞ்சிங்கமாய், ஆட்டு மந்தைகளிடையே புகுந்தது மாதிரி எதிரிகளை சிதறடித்தார்கள். ஒரு கட்டத்தில் தந்தை எதிரிகளால் சூழப்படுவதை பார்த்த சிறுவர், கையில் கொடியுடன் மறு கையில் ஒரு தடியுடன், இமாமவர்களை பாதுகாக்கும் பொருட்டு எதிரிகளைத் தாக்க அச்சிறுவரும் ஷஹீதானார்கள்.

**அல்லாஹ்வின் சிங்கம் ஹஜ்ரத் அலீயின் வீரம்...**

புயல் கடலாய் பொங்கியெழுந்த இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு அவர்கள் எதிரிகளை துவம்சம் செய்தார்கள். இமாமவர்களின் அருகிலும், முன்னிலும் செல்வதற்கு எதிரிப்படை வீரர்கள் பின் வாங்கினார்கள். அல்லாஹ்வின் அர்ஷின் சிங்கம், அலீயின் (ரஜியல்லாஹு அன்ஹு) வீரப் புதல்வரான இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹுவைத் தாக்குவதற்கு தைரியம் எதிரிகளில் ஒருவரிடமுமில்லை. 3 நாட்களாக ஒரு சொட்டுத் தண்ணீர் கூட பருகாததன் காரணமாக ஏற்பட்ட நாவறட்சி இமாமவர்களை மிகவும் வாட்டியது. அத்துனை களைப்பிலும் நாவை வெளியே நீட்டிக் கொண்டவாறு, காற்றிலுள்ள ஈரப்பசையை உறிஞ்சிக் கொண்டே, தமது வாளை சுழற்றி அடித்துக் கொண்டே இருந்தார்கள்.

**ஷஹாதத்...!**

முஹர்ரம் 10ம் நாள் ஜும்மா வேளை (வெள்ளிக்கிழமை மதிய தொழுகை) நகர்ந்துக் கொண்டே பொழுது போவதை இமாமவர்கள் கவனிக்க, தொழுகை கஸா ஆவதை தடுக்க அதனுடைய கடைசி நேரத்தை, அல்லாவிற்காக, அல்லாஹ்வின் நேசரான இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு அவர்கள்

தன்னுடைய எல்லாக் கஷ்டங்களையும், தற்பொழுதுள்ள சூழ்நிலையையும் மறந்தவர்களாக வெறும் அல்லாஹ்வின் நினைவன்றி வேறு அல்லாமல் தொழுகையில் நின்று தொழ ஆரம்பித்து விட்டார்கள்.

**(அல்லாஹ்வின் நேசர்களுக்கு எந்த வித துன்பமும், பயமும் கிடையாது - திருக்குர்ஆன்)**

இப்போது எதிரிகளுக்கு திகைப்பும், சந்தர்ப்பமும் கிடைத்தது. தன்னை நெருங்கி விட முடியாது படி, போர்புரியும் மாவீரரை தாக்க இதுவே சரியான தருணம் என திட்டமிட்ட கயவர்கள். ஒரு சஜ்தாவை முடித்துக் கொண்டு மறு சஜ்தாவிற்கு செல்லும் போது இமாமவர்களின் கழுத்தில் ஓங்கி வெட்டினார்கள்...! இன்னாலில்லாஹி வ இன்னா இலைஹி ராஜி ஊன்!

இந்தக் காரியத்தை கொடும் நரகவாதிகளான ஸினான், ஸர்ஆ இப்னு ஷரீக் தைமீ, ஷிம்ரு தில்ஜோஷன் ஆகியோர் செய்தனர். இமாமவர்களது உடம்பில் அம்புக் காயங்கள் 33ம், வெட்டுக் காயங்கள் 34ம் இருந்தது. இமாமவர்கள் ஷஹீதாகும் போது அவர்களுக்கு வயது 56 வருடம் 5 மாதம் 5 நாள் ஆகியிருந்தது. கர்பலா களத்தில் ஷஹீதான 72 போர்களின் புனிதத் தலைகளும் கூஃபா நகருக்கு எடுத்துச் செல்லப்பட்டது! இமாமவர்களின் உடல், அஹ்லுல் பைத்துகள் மீது காழ்ப்புணர்ச்சி கொண்ட இஸ்லாமிய வெறியர்களால் குதிரைகளைக் கொண்டு சிதைக்கப்பட்டது!

ஷிம்ரு தில்ஜோஷன் அஹ்லுல் பைத்து பெண்களையும், குழந்தைகளையும் துன்புறுத்திய போது, அம்ரு அவனைக் கண்டித்து தடுத்துவிட்டான். நோய்வாய்ப்பட்டிருந்த ஹஜ்ரத் ஜைனுல் ஆபிதீன் ரஜியல்லாஹு அன்ஹுவை கொலை செய்யும் முயற்சியிலிருந்தும் ஷிம்ருவை தடுத்து விட்டிருந்தான்.

அஹ்லுல் பைத்து பெண்களும், குழந்தைகளும், நோய்வாய்ப்பட்டிருந்த ஹஜ்ரத் ஜைனுல் ஆபிதீன் ரஜியல்லாஹு அன்ஹுவும் கண்ணீர் கடலோடு, அழுது கொண்டே கூஃபாவிற்கு சிறைப்பிடித்துக் கொண்டு சென்ற காட்சி, மற்றும் ஷுஹதாக்கள் 72 போர்களின் தலையையும் கொய்து ஊர்வலமாக நகரில் கொண்டு சென்ற காட்சி, வயது முதிர்ந்த சஹாபா பெருமக்களையும், மற்ற முஸ்லிம் மக்களையும் கிளர்ச்சியுறச் செய்து கொடியவன் யஜீதுவுக்கு எதிராக கலகங்களை உருவாக்கியது. இந்தச் சூழ்நிலையை யஜீது

சற்றும் எதிர்பாரமலேயே இருந்தான். மக்கள் பயத்தால் அடங்கிவிடுவார்கள் என்ற தப்புக்கணக்கை போட்டிருந்தான், அந்தக் கொடியவனான யஜீது.

கூஃபாவாசிகளில் உள்ள சில மக்களும் கொடியவன் யஜீதுக்கு எதிராக கலகங்களை ஏற்படுத்தினர். புரட்சியாளர்களை அடக்குவதற்கு யஜீதின் படைவீரர்களால் படுகொலைகளும் அன்றைய தினத்தில் செய்யப்பட்டது. இப்போது இமாமவர்களின் மக்கள் செல்வாக்கை உணர்ந்தவனான யஜீது, நிலைமையை சமாளிப்பதற்காக வேண்டி, அரசியல் நோக்கத்திற்காக "இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு அவர்களை கொலை செய்ய, நான் கட்டளையிடவில்லை! தனக்கு கீழ் உள்ள உபைதுல்லாஹ் இப்னு ஸியாது மற்றும் சிலரின் தவறான முடிவினால் இந்த அசம்பாவிதம் ஏற்பட்டுவிட்டது. இதற்காக நான் மனம் வருந்துகிறேன்" என நடிக்கவும் செய்தான். பின்பு மக்களிடம் நன்மரியாதையை பெறும் பொருட்டும், ஆட்சியை தக்க வைப்பதற்கும் ஏதுவாக அஹ்லுல் பைத்து பெண்களையும் குழந்தைகளையும் பாதுகாப்பாக மதீனாவிற்கு அனுப்பி வைக்க ஏற்பாடு செய்தான்.

இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு அவர்களின் புனிதத் தலை, ஒரு தங்கத்தட்டில் பொதுமக்களின் ஜியாரத்திற்காக (தரிசனத்திற்காக) அரண்மனை மண்டபத்தின் நடுவில் வைக்கப்பட்டது. அப்போது அங்கே வந்த யூதப் பிரமுகர் ஒருவர், "நான் தாவூது அலைஹிஸலாம் நபியின் 70வது தலைமுறையை சார்ந்தவன். என்னிடம் என் சமூக மக்கள் எல்லையற்ற மதிப்பினை வைத்திருக்கிறார்கள்! நீங்கள் இப்போது வந்த உங்கள் நபியின் மறைவை அடுத்து, அவரின் திருப்பேரரை கொன்று விட்டீர்களே!" என அழுதுக் கொண்டே புனிதத் தலை அருகே சென்று திருக்கலிமாவை சொல்லி முஸ்லிமானார்.

சுற்றும் முற்றும் அருகிலிருந்தவர்கள் ஆச்சரியத்துடன் அந்த யூதரைப் பார்க்க, அவர், "எத்தனையோ காலமாய் இஸ்லாத்தைப் பற்றி என்னிடம் சொல்லப்படுகிறது. ஆனால் சற்று முன்னர் அந்தப் புனிதத் தலை மோன மொழியில் எனக்கு உபதேசித்த உண்மையை உணர்கிற எந்த அந்நியனும் இஸ்லாத்தை ஏற்காமல் இருக்க முடியாது! உடலால் இறந்து போன பின்பும், உயிரற்று கிடந்த என் உள்ளத்திற்கு உயிர் கொடுத்தவரே!" எனக் கூறி அழுதுக் கொண்டே அவ்விடத்தை விட்டு வெளியேறினார்கள்.

இமாமவர்களின் புனிதத் தலை கர்பலாவில் அடக்கம் செய்யப்பட்டது. பனீ அஸ்அத் என்பவரின் தலைமையில் அடக்கத்திற்கான ஏற்பாடு செய்யப்பட்டது. அஹ்லுல் பைத்துகள் கண்ணீருடனேயே புனித மதீனா நகருக்கு வந்து சேர்ந்தனர்.

ஹிஜ்ரி 64ல் (கி.பி 683) யஜீது பைத்தியம் பிடித்தவன் போல் மனநிலை பாதித்து ஹவ்ரான் என்ற இடத்தில் செத்தொழிந்தான். அப்போது அவனுக்கு வயது 39. அவன் ஆட்சி நடத்தியது 3 வருடம், 8 மாதம், 14 நாட்களே! யஜீதுக்கு பிறகு, அவன் மகன் கலீல் என்பவர், ஜாமிஆ மஸ்ஜிதில் மக்கள் முன்னிலையில், "இந்த கிலாஃபத் பதவி அத்தனை சாதரணமானதல்ல, இதை ஹஜ்ரத் அபூபக்கர், ஹஜ்ரத் உமர், ஹஜ்ரத் உஸ்மான், ஹஜ்ரத் அலீ (ரஜியல்லாஹு அன்ஹும்) போன்ற மேன்மக்களாலயே நிர்வகிக்க முடியும். தகுதியற்றவர்களின் கையில் கொடுக்கப்பட்டால் என்ன நடக்கும் என்பதைப் பார்த்து விட்டீர்கள். என் தந்தை அஹ்லுல் பைத்துகளை கொன்றொழித்து விட்டார். முஸ்லிம் உலகம் என்றுமே மறக்க முடியாத இப்பாதக செயலுக்கு ஆட்சியின் மீது இருந்த மோகமல்லவா? நியாயப்புத்தியும், நன்னடத்தையும் உள்ளவர்களால் இக்கொடும் காரியத்தை செய்ய இயலுமா? எனக்கு இப்பதவி தேவையில்லை! இதை யார் எடுத்துக் கொண்டாலும் சரி... நான் ஆட்சேபம் தெரிவிக்க மாட்டேன்" என்று தெரிவித்து விட்டு இல்லம் சென்றவர் 3 மாதங்கள் கழித்து இறந்து விட்டார்.

## அமானித ஜோதியை தாங்கியவர்கள் - அஹ்லுல் பைத்துகள்

அல்லாஹ்வை அடைந்து கொள்பவர்கள் (ஆரிஃபீன்கள்), அல்லாஹ்வின் விருப்பத்திற்கு அல்லாமல் வேறு எதற்காகவும் வாழ்ந்தவர்கள் அல்ல என்பதையே கர்பலா சம்பவம் நமக்கு படிப்பினைத் தருகிறது. நியாயத்தையும், சத்தியத்தையும் நிலைநிறுத்துவதற்காகவே இஸ்லாம் வந்தது. அநியாயம் மேலோங்கி, சமயத்தில் செல்வத்தையும், குடும்பத்தையும், இன்னும் தன்னுயிரையும் பறிக்க துடித்த போதும், சத்தியத்தை நிலைப்படுத்துவதற்காக வேண்டி, இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு காட்டிய எல்லையற்ற பொறுமையையும், சகிப்புத்தன்மையும் ரஸூலல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் முன்மாதிரிகளையே வெளிப்படுத்தியது!

உதாரணமாக ரஸூலல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை தாயிஃப் நகர மக்கள், கல்லாலடித்து துன்புறுத்திய நேரத்தில், வானவர் ஒருவர் வந்து மலைகளை பிடுங்கி தாயிஃப் நகர மக்கள் மீது எறிய அனுமதி கேட்ட போது, கருணை வடிவமான நாயகமவர்கள் அவ்வானவரை தடுத்து, “நான் என் உம்மத்தினரை அழிப்பதற்காக அனுப்பப்பட்டவனல்ல! வாழ வைப்பதற்காகவே வந்தவன்” என்று அருளியே அதே பதிலை, கர்பலா களத்தின் கடைசி நேரத்தில், ஒரு ஜின் (ஜாஃபர் ஸாஹித்) வந்து இமாமவர்களின் எதிரிகளை கூண்டோடு அழிப்பதற்கு அனுமதி கேட்ட போதிலும், இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு அவர்கள் அந்த ஜின்னிற்கு அனுமதியை மறுத்து, தமது பாட்டனாரின் முன்மாதிரியை செயலாக்கி காட்டினார்கள்.

ஹஜ்ஜை முடித்துக் கொண்டு புனித மதீனாவிற்கு திரும்பிய நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கதீர்-அல்-கும் என்ற வழித் தடத்தில், தடுமாறப் போகும் உலகம் - தாங்கிக் கொள்ள சில அறிவுரைகளை வழங்கினார்கள். அதில்,

“மக்களே! எனக்குப் பின்னர் இரண்டு பொருள்களை, நான் உங்களிடையே விட்டுச் செல்கிறேன். ஒன்று அல்லாஹ்வின் திருக்குர்ஆன் - இதில் நேர்வழியும், பேரொளியும் உள்ளது. இதை உறுதியாக பற்றிக் கொள்ளுங்கள்; இரண்டாவது அஹ்லுல் பைத்துகள் என்னும் என்னுடைய வீட்டாரின் விஷயத்தில்

உங்களுக்கு அல்லாஹ்வைக் கொண்டு நினைவூட்டுகிறேன்” என்றார்கள்.

**(குறிப்பு :- வஹாபிகள் இந்த இரண்டு பொருள்களை ஒன்று திருக்குர்ஆன், இரண்டு ரஸுலுல்லாஹ்வின் சுன்னத்து என்று இரண்டாவது விஷயத்தில் மாற்றமாக (பொய்யாக) கூறி, அஹ்லுல் பைத்துகளின் மீது கொண்டிருக்கும் காழ்ப்புணர்ச்சியை வெளிப்படுத்தி வருவது கண்கூடாகும்)**

ஆம், நிச்சயமாக இஸ்லாமியர்கள் வெறும் புத்தகத்தை மட்டும் நம்புகிறவர்களில்லை, ஏனெனில் வெறும் புத்தகத்தை மட்டும் நம்பியவர்களான யஹுதிகளும், நஸ்ராணிகளும் வழி தவறிவிட்டனர். காரணம்; வழி நடத்தக் கூடிய இறைநேசர்கள் (வலிமார்கள்) அவர்களில் இல்லாமல் இருப்பதே ஆகும். ஆனால் இறுதியும் முதலுமான நபி முஹம்மத் முஸ்தஃபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் சந்ததிகளான அஹ்லுல் பைத்துகள், தமது பாட்டனாரின் அமானித ஜோதியை(நூர்) தமக்குள் தாங்கி இஸ்லாமியத்தின் கொள்கைகளையும், நடைமுறைகளையும் தமது வாழ்க்கையில் வாழ்ந்து காட்டியும் - வழி காட்டியும் (Practising Guide) முஸ்லிம் சமுதாயத்தினரை வழி தவற விடாமல் இன்றளவும் பாதுகாத்து வருகிறார்கள்! ஏன் கியாமத் நாள் (உலக அழிவு) வரையும் பாதுகாப்பார்கள்!

உலகில் தௌஹீதை (இறைவன் ஒருவனே) நிலைநாட்டுவதே நபிமார்களின் நுபுவ்வத்தின் லட்சியம், அந்த லட்சியம் நமது இறுதியும் முதலுமான நபி முஹம்மத் முஸ்தஃபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களோடு நிலைப்பெற்று விட்டது. நுபுவ்வத்தின் வேலையும் முடிந்து விட்டது. இனி விலாயத்தைக் (இறை நேசத்தன்மை) கொண்டே அல்லாஹ்வின் காரியங்கள் பூமியில் நிகழ்ந்து வரும். இந்த சத்திய வேலையை ஹஜ்ரத் அலீயும், (ரஜியல்லாஹு அன்ஹு) விலாயத்தின் ஜோதி பொருத்தப்பட்ட அவர்களின் சந்ததியினருமே செய்து முடிப்பார்கள் என்பதை உணர்த்துவதற்காகவே,நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள், விலாயத்தின் சுடரை தம் இதயத்தில் தேக்கி வைத்து கொண்டிருந்த அலீயை (கர்ரமல்லாஹு வஜ்ஜஹு), தம் தோளின் மேல் ஏற்றி, கஅபாவினுள் இருந்த தலைமை (பெரிய) விக்கிரகத்தை ஹஜ்ரத் அலீ ரஜியல்லாஹு அன்ஹுஅவர்களின் கரங்களாலயே உடைக்கப்பட்டதும் விளங்கும்.

கர்பலா களத்தில் நோய்வாய்ப்பட்டதனால், உயிர் பிழைத்த

ஹஜ்ரத் இமாம் ஜைனுல் ஆபிதீன் ரஜியல்லாஹு அன்ஹு மற்றும் அஹ்லுல் பைத்து குழந்தைகளால் புனித நபிகளார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் சந்ததிகள் (வாரிசுகள்) இன்றளவும் பூமியில் வாழ்ந்துக் கொண்டும், வழிகாட்டிக் கொண்டும் உள்ளார்கள். அவர்களில் ஹஜ்ரத் இமாம் முஹம்மத் பாகர், ஹஜ்ரத் இமாம் ஜாஃபர் சாதிக், ஹஜ்ரத் இமாம் மூஸா காஜிம், ஹஜ்ரத் இமாம் அலீ மூஸா ரஜா, ஹஜ்ரத் இமாம் முஹம்மத் தஃகீ, ஹஜ்ரத் இமாம் அலீ நஃகீ, ஹஜ்ரத் இமாம் ஹஸன் அஸ்கரீ, ஹஜ்ரத் ஜுனைதுல் பகுதாதி, ஹஜ்ரத் கௌதுல் ஆஜம் முஹ்யித்தீன் ஷேக் அப்துல் காதிர் ஜீலானி ஆண்டகை, அற்புத ஜோதி ஆரிஃப் நாயகம், ஹஜ்ரத் காஜா கரிபுன் நவாஸ் அஜ்மீரி, ஹஜ்ரத் தாதா தப்லே ஆலம் பாதுஷா திருச்சி, ஹஜ்ரத் காதர் வலி நாகூரி, ஹஜ்ரத் ஷாஹ் இப்ராஹிம் ஷஹீத் வலியுல்லாஹ் ஏர்வாடி, காஜா அஹமதுல்லா ஷா காஜாமலை, ஷா ரஹ்மதுல்லாஹ் வலியுல்லாஹ் - கிள்ளை, சாஹெப் வலியுல்லா, இரட்டை மஸ்தான் வலியுல்லாஹ்கள் - தஞ்சை, இன்னும் பெரும் எண்ணிக்கை கொண்ட இறைநேசர்கள் (ரஜியல்லாஹு அன்ஹும்), நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் அமானித ஜோதியை தமக்குள் தாங்கி இஸ்லாமியத்தின் பரிபூரணத்தை தொடர்ந்து கொண்டிருக்கின்றனர். இது உலக முடிவு நாளுக்கு அண்மையில் வரவிருக்கும் ஹஜ்ரத் இமாம் மஹதி வரை தொடரும்.

இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு அவர்கள் கர்பலா களத்தில் சண்டைக்கு செல்லும் முன்னர், ஹஜ்ரத் ஜைனுல் ஆபிதீன் இப்னு ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹுவை தம் தங்கையிடம் ஒப்படைத்து “நாங்கள் அனைவருமே, இவரிடம் தான் இருக்கிறோம். இவரை பத்திரமாக பார்த்துக் கொள்ளுங்கள்” என்று பணித்து சென்றார்கள். இதன் மூலம் ஹஜ்ரத் ஜைனுல் ஆபிதீன் ரஜியல்லாஹு அன்ஹு அவர்களிடமிருந்து அமானித ஜோதி அஹ்லுல் பைத்துகளிடம் பரவியது என்பதை தெளிந்துக் கொள்ளலாம்.

உருவத்திலும், தோற்றத்திலும் பார்ப்பதற்கு நபி முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமை போல் காட்சியளிக்கும் இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு, இஸ்லாத்தின் உண்மைக்கும், நன்மைக்கும் தன்னையே கர்பலா களத்தில் தியாகம் (குர்பானி) செய்து கொண்டது! உண்மையில் இஸ்லாம் பரிபூரணம் ஆன பின்பும், நபி இஸ்மாயில் அலைஹிஸலாமவர்களின் பாக்கியிருந்த குர்பானியை பூர்த்தி செய்தது! நபியின் பேரனாரின் தியாகம் உண்மையில் ரஸுலல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி

வஸல்லமவர்களின் தியாகமே ஆகும்.(அதாவது பாக்கியிருந்த நபியின் குர்பானியை, நபியைப் போல் தோற்றமளிக்கும் நபியின் பேரனால் ஈடு செய்யப்பட்டது) என்பது சூஃபியாக்களின் கருத்தாகும். இந்தக் கருத்தை “நான் ஹுஸைனில் இருக்கிறேன், ஹுஸைன் என்னில் இருக்கிறார் - **அல் ஹுஸைன் மின்னீ வ அனா மினல் ஹுஸைன்** ” என்ற ஹதீஸ் மூலம் தெரிந்துக் கொள்ளலாம்.

## இறைநேசர்களின் செயல்களை நினைவுப்படுத்துவதே இஸ்லாம்

ஆதம் அலைஹிஸ் ஸலாமவர்கள் தொழுத ஃபஜ்ர் தொழுகையும், இப்ராஹீம் அலைஹிஸ் ஸலாமவர்கள் தொழுத ளுஹர் தொழுகையும், யாகூப் அலைஹிஸ் ஸலாமவர்கள் தொழுத அஸர் தொழுகையும், தாவூத் அலைஹிஸ் ஸலாமவர்கள் தொழுத மஃரிப் தொழுகையும், யூனுஸ் அலைஹிஸ் ஸலாமவர்கள் தொழுத இஷா தொழுகையும் கொண்டு ஐவேளைத் தொழுகைகளாக நிலைநிறுத்தி இறைநேசர்களை நினைவுப் படுத்துகிறதல்லவா இனிய இஸ்லாம்!

புனித கஅபாவை கட்டும் பணியில் ஈடுபட்டிருந்த புனித நபி இப்ராஹீம் அலைஹிஸ் ஸலாமவர்களின் கால் பதித்த கல்லை கண்ணியப்படுத்துவதற்காக வேண்டி “மகாமி இப்ராஹீம முசல்லா” என திருக்குர்ஆன் மூலம் 2 ரக்அத்து தொழுகையை கட்டாயம் (வாஜிபு) செய்து, இப்ராஹீம் அலைஹிஸ் ஸலாமவர்களின் நினைவை ஏற்படுத்துகிறதல்லவா இனிய இஸ்லாம்!

ஹாஜிகள் இன்று ஸஃபா, மர்வா குன்றுகளிடையே தொங்கோட்டம் ஓடுவது, அன்னை ஹாஜிரா அலைஹிஸ் ஸலாம் அவர்கள் தமது பச்சிளம் குழந்தையின் (நபி இஸ்மாயில் அலைஹிஸ் ஸலாம்) தண்ணீர் தாகத்தை தவிர்ப்பதற்காக வேண்டி, ஸஃபா மர்வா குன்றுகளிடையே ஓடி ஓடி தண்ணீர் தேடி பரிதவித்ததை நினைவுப்

படுத்துகிறதல்லவா இனிய இஸ்லாம்!

நபி இப்ராஹீம் அலைஹிஸ் ஸலாமவர்களின் குர்பானியை, அல்லாஹ் ஏற்றுக் கொண்டதை நினைவுப் படுத்துகிறதல்லவா நாம் கொண்டாடும் பக்ரீத் பண்டிகை. மர்யம் அலைஹிஸ் ஸலாமவர்கள் தங்கி இபாதத் செய்த இடத்தில், நபி ஜக்கரிய்யா அலைஹிஸ் ஸலாம் சென்று செய்த துவாவில், அல்லாஹ்விடம் முராதைப் (பயனை) பெற்ற சம்பவம். இறைநேசர்களை வஸீலாவாக்கி நினைக்க சொல்கிறதல்லவா இனிய இஸ்லாம்!

இறுதியில் ஒரு மூஃமினுக்கு (விசுவாசிக்கு) தீனுடைய எல்லா விஷயங்களிலும், ஈருலகத்தின் நாயகர் ரஸூலல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் நினைவை நினைக்க செய்து, அல்லாஹ்வை அடையச் செய்யும் வழியை (ஸூஃபிஸம்) ஏற்படுத்துகிறதல்லவா இனிய இஸ்லாம்!

ரஸூலல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் நினைவில் இனியவரான, அல்லாஹ்வின் நாட்டத்திற்கு தன்னை பொருத்தமாக்கி கொண்டு தம் குடும்பத்தாரையும், தோழர்களையும், தன்னுயிரையும் தியாகம் (குர்பானி) செய்த இமாம் ஹுஸைன் ரழியல்லாஹு அன்ஹு அவர்களை நாம் நினைக்க வேண்டாமா?

காஜயே காஜகான், அதாயே ரஸூல், குத்புல் ஹிந்த், இந்திய வலிமார்களின் மஹாராஜா, ஹஜ்ரத் காஜா கரிபுன் நவாஸ் முயினுத்தீன் சிஸ்தி அஜ்மீரி சஞ்சரி ரழியல்லாஹு அன்ஹு அவர்கள், இமாமவர்களின் தியாகத்தைப் பற்றி பின்வருமாறு குறிப்பிடுகிறார்கள்.

شاہ ہست حسین بادشاہ ہست حسین دین ہست حسین دین پناہ ہست حسین
سر داد نہ داد دست در دست یزید حقا کہ بنائے لا الٰہ ہست حسین

**ஷா அஸ்த் ஹுஸைன்; பாதுஷா அஸ்த் ஹுஸைன்.**
**தீன் அஸ்த் ஹுஸைன் தீன்; பனா அஸ்த் ஹுஸைன்.**
**சர்தாத் நா தாத் தஸ்த்; தர் தஸ்த்-யே-யஜீத்.**
**ஹக்கா கே பினாயா; லா இலாஹ் அஸ்த் ஹுஸைன்.**

ஆட்சியாளர் ஹுஸைன், மன்னாதி மன்னர் ஹுஸைன்!
மார்க்கமே ஹுஸைன், மார்க்கத்தின் பாதுகாவலர் ஹுஸைன்!
தன் தலையை கொடுத்த ஹுஸைன்; யஜீதுக்கு கை

கொடுக்கவில்லை!
ஆதலால் உண்மையில் வணக்கத்திற்குரியவன் அல்லாஹ் ஒருவனே என்பதன் ஆணிவேராகவும் அதற்கு வித்திட்டவரும் ஹுஸைன் தான்!

–காஜா முயினுத்தீன் சிஷ்தி ரஹமத்துல்லாஹி அலைஹி

இவ்வாறு இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு அவர்கள் ஷஹீதாகி, யஜீதின் பொய்யை கொன்றொழித்து! இஸ்லாமியத்தின் மெய்யை காப்பாற்றிய கர்பலா சம்பவத்தின் நாளான முஹர்ரம் 10ம் நாளான ஆஷுரா தினத்தன்று இமாமவர்களையும், அஹ்லுல் பைத்துகளின் தியாகத்தையும், வீரத்தையும், உண்மையையும் நினைத்துப் பார்த்து, அவர்களனைவரின் மீதும் ஃபாத்திஹா ஓதி, நாம் சவாபையும் (பலனையும்), பரக்கத்தையும் பெற்றுக் கொள்வது, இஸ்லாமிய இறைநேசர்கள் - பெரியார்கள் - முன்னோர்களின் வாழையடி வாழை செயலாகும்.

நாங்கள் கர்பலா களத்தில் இருந்திருந்தால் உணவுக்காகவும், தண்ணீருக்காகவும் வாடிய அஹ்லுல் பைத்துகளுக்கு உணவுத் தண்ணீர் கொடுத்து உதவியிருப்போம் என்ற நோக்கத்தோடும்! அஹ்லுல் பைத்துகள் அந்தப் பசி, தாகக் கொடுமையில் தங்களிடம் கொஞ்சம் கொஞ்சமாக எஞ்சியிருந்த அனைத்து உணவு தானிய வகைகளைக் கொண்டும், சிறிது தண்ணீரையும் கொண்டும் கடைசி உணவாக “கிச்சடா” (கூட்டாஞ் சோறு) சமைத்து உண்டதன் நினைவை (சண்டை தொடங்கிய 3 நாட்களுக்கு முன்பாக) ஏற்படுத்தும் விதமாக, ஷஹாதத்தின் நாளான முஹர்ரம் 10 ல் கிச்சடாவும், குளிர்ந்த இனிப்பான சர்பத் பானமும் உற்றார் உறவினர்களுக்கு வழங்கி, நாங்களும் இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு அவர்களின் சத்திய அணியை சார்ந்தவர்களே! என்ற உள்ளத்தின் உணர்ச்சியை வெளிப்படுத்தும் விதமாக மொஹரம் 10 ம் நாள் பாத்திஹா வெகு விமர்சையாக உலகம் முழுவதிலும் கொண்டாடப்படுகிறது.

இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு அவர்களை நினைக்க மறுப்பவர்களும், அநியாயத்திற்கு துணை போகிறவர்களும், இறைநேசர்களை (வலிமார்களை) வெறுப்பவர்களும் - அவமதிப்பவர்களும், கொடியவன் யஜீதின் அணியைச் சார்ந்தவர்களே! என்பதை தெரிந்து கொள்ளவும், மேலும் தீயோர்களிலிருந்து விலகி இருக்கவும்!, நல்லவர்களுடன் சேர்ந்து இருக்கவும்!, முஹர்ரம் 10 ம் நாளான கர்பலா சம்பவம் படிப்பினைத்

தருகிறது.

இஸ்லாமிய ஆண்டின் இறுதி மாதம் துல்ஹஜ்ஜு குர்பானியோடு (தியாகத்தோடு) முடிவடைகின்றது என்றால்,இஸ்லாமிய ஆண்டின் துவக்க மாதமான முஹர்ரமை இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு அவர்கள் குர்பானியோடு (தியாகத்தோடு) ஆரம்பித்து வைக்கிறார். குர்பானிகளுக்கு (தியாகங்களுக்கு) இடைப்பட்டது தான் உண்மையான இஸ்லாம் என்பதையும் தெரிந்து கொள்ளலாம்.

## பஞ்சா என்ற அலம் (சின்னம்)

அலம் என்ற சின்னத்தை பற்றி திருக்குர்ஆனில் “ஷஆயிருல்லாஹ்” எனக் கூறப்படுகிறது. அதாவது எந்த ஒரு பொருளையோ அல்லது வஸ்துவையோ நோக்கும் போது அல்லாஹ்வும் - ரஸுலும், இறைநேசர்களும் நினைவுக்கு வருவார்களோ அவைகள் எல்லாமே “அலம்” என்ற சங்கைக்குரிய நினைவுச் சின்னங்களாகும்.

உதாரணமாக, பிற சமூகத்தினர்கள் வணங்கும் சந்திரன், நட்சத்திரங்களை இரண்டாம் கலீஃபாவான ஹஜ்ரத் உமர் ரஜியல்லாஹு அன்ஹு, இஸ்லாத்தின் நிரந்தர அலமாக (கொடி சின்னமாக) அறிவித்தார்கள். அன்று முதல் அச்சின்னத்தை மதிப்பதும், கௌரவிப்பதும் முஸ்லிம்களின் பண்பாகிவிட்டது. இந்நிலையில் வேறு சமூகத்தினர்கள் வணங்கும் வஸ்துக்களான சந்திரன், நட்சத்திரங்களை கொடி வடிவில் ஏற்றுக் கொள்ள முடியாது என்று கூறுவது அறிவீனமாகும். ஒரு வஸ்துவை இறைவன் என்று வணங்குவதிலும், புனிதம் என்று எண்ணி மதிப்பதிலும் வானம் பூமிக்கு இடையே உள்ள வித்தியாசம் உண்டு.

ஐந்து விரல்களைக் கொண்ட உள்ளங்கை சின்னத்திற்கு

“பஞ்சா” என்று பெயர். நபி அவர்களே! எவர்கள் உங்கள் கையின் மேல் கை வைத்து சத்தியப்பிரமாணம் (பைஅத்) செய்தார்களோ, அவர்கள் உண்மையிலேயே அல்லாஹ்விடமே வாக்குறுதி செய்தார்கள். அவர்களின் கையின் மேல் இருந்த உங்களுடைய கை அல்லாஹ்வுடைய கையாகும்” என திருக்குர்ஆன் (48:10) கூறுவதாலும், இமாம் ஹுஸைன் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் தனது தலையை கொடுத்து விட்ட போதிலும், அசத்தியத்திற்கு (யஜீதுக்கு) கை கொடுக்காமல் உயர்த்தி நின்றதாலும்,மேலும் “பஞ்சதனே பாக்” எனப்படும் ஹஜ்ரத் முஹம்மத் முஸ்தஃபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம், ஹஜ்ரத் அலீ, ஹஜ்ரத் ஃபாத்திமா, ஹஜ்ரத் இமாம் ஹஸன், ஹஜ்ரத் இமாம் ஹுஸைன் (ரழியல்லாஹு அன்ஹும்) ஆகிய ஐம்பெரும் ஜோதிகளை குறிப்பதாலும், கண்ணியத்துடன் இஸ்லாமிய இறை நேசர்களால் “பஞ்சா” என்ற அலம் நிறுவப்பட்டு கண்ணியப் படுத்தப்படுகிறது.

மொஹரம் 10ம் நாளான ஆஷுரா தினத்தன்று, இமாமவர்களின் வீர தியாகத்தை பறைச் சாற்றும் விதமாக, பஞ்சாக்களை ஆஷுர்கானா என்ற இடத்தில் வைத்து, மலர்களால் அலங்கரிக்கப்பட்டு, இமாமவர்களின் புகழையும், அஹ்லுல் பைத்துகளின் சிறப்புகளையும் எடுத்தோதிய பிறகு பஞ்சாக்களை ஊர்வலமாக எடுத்துச் செல்வது வழக்கமாகும்.

## அலாவா நெருப்பு...

எப்படி இமாமவர்கள் கர்பலா களத்தில் சண்டைக்கு செல்லும் முன்னர், அஹ்லுல் பைத்து பெண்களையும், குழந்தைகளையும் காக்கும் பொருட்டு, கூடாரத்தைச் சுற்றி அகழ்தோண்டி நெருப்பு வளர்க்கப்பட்டிருந்ததை, ஒரு முறை முழுவதுமாக சுற்றிப் பார்த்து விட்டு, போர் புரிய சென்றார்களோ! அதே போல், பஞ்சாவை தூக்கிக் கொண்டு விறகினால் வளர்க்கப்பட்டிருந்த நெருப்பு பாதையை சுற்றிய பின்னர், அதனுள் இறங்கிய பின்பே பஞ்சாவை ஊர்வலத்திற்கு எடுத்துச் செல்வது வழக்கம். அந்த நெருப்பு மூட்டப்படும் இடம் அலாவா எனப்படுகிறது.

கர்பலா களத்தில் பாதுகாப்பிற்காக,இமாமவர்களால் வளர்க்கப்பட்ட நெருப்பு, எதிரிகளை கூடாரத்தின் பக்கம் நெருங்க முடியாமல் நரக நெருப்பாக மாறி எரித்து தள்ளியது. ஆனால் அதே நெருப்பை கடந்து, அடிபட்ட இமாமின் அணியினரை காப்பாற்றச்

சென்ற அஹ்லுல் பைத்துகளையும், இமாமைச் சார்ந்தவர்களையும் அந்நெருப்பானது தீண்டவில்லை! ஆம், நம்ரூத் வார்த்த நெருப்புக் குண்டத்தில் தூக்கி எறியப்பட்ட நபி இப்ராஹீம் அலைஹிஸ் ஸலாமவர்களை, ஸலாமத்தாக (மித வெப்ப, மித குளிர்ச்சி) வைத்து காத்த அல்லாஹுதஆலா! கர்பலா களத்திலும் தனது கருணையை வெளிப்படுத்தினான் என்பதில் ஐயமில்லை. எனவே நாங்களும் ஹுஸைனிதான்! ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹுவைச் சார்ந்தவர்கள் தான்! என்பதை மெய்ப்படுத்தவே "அலாவா"வில் (நெருப்பில்) இறங்குதல் என்ற தீ மிதிப்பு வைபவங்களையும் நடத்துகின்றனர் நம் முன்னோர்கள், அதில் அல்லாஹுதஆலாவும் தன் கருணையை புரிந்து வருகிறான்.

**வீர விளையாட்டுக்கள்...**

பஞ்சாக்களை வைக்கும் ஆஷுர்கானா இடத்தில், இளைஞர்களுக்கு குஸ்தி, சிலம்பம், மற்றும் பல வீர விளையாட்டுகள் கற்றுக் கொடுக்கப்பட்டு, ஹஜ்ரத் அலீ ரஜியல்லாஹு அன்ஹு மற்றும் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் வீரம் சார்ந்த சுன்னத்துகள் கற்றுக் கொடுக்கப்பட்டது! சில இடங்களில் இன்றளவும் நடந்துக் கொண்டு வருகிறது. ஏனெனில் இஸ்லாமியர்கள் கோழைகள் அல்ல, வீரம் நிறைந்த இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு அவர்களை நினைவில் நிறுத்தியவர்கள் என்பதற்காகவே!

இஸ்லாமியத்தை அதன் உண்மையான வடிவில் தெரிந்துக் கொள்வதற்கு கல்வி ஞானம் மிக அவசியம் என்பது தெரிந்த உண்மை. அப்படியிருக்குமானால், அறிவுள்ளவர்கள் மட்டுமே ஈமான் என்ற நசீப்பை (அதிர்ஷ்ட விதி) பெற்றிருப்பார்கள் எனில் ஹாபிஸ், ஆலிம் போன்ற உலமா பெருமக்கள் மட்டுமே வலுவான ஈமானை பெற்றிருப்பார்கள். மேலும் உலக படிப்பு சம்பந்தமான அறிவியல் ஞானம் கொண்ட மேதைகளும், இஸ்லாத்தை ஆராய்ச்சி செய்து, அதில் சொல்லப்பட்ட விஷயங்கள் அனைத்தும் உண்மையானவையே என்று கூறுகின்ற பெரிய பெரிய விஞ்ஞானிகளும், டாக்டர்களும் இஸ்லாம் மீது நம்பிக்கை கொண்டு அல்லாஹ் ஒருவனையே தங்களின் இறைவனாக ஏற்றிருப்பார்கள். ஆனால் விஷயம் அவ்வாறில்லை என்பதையே உணர முடிகிறது!

ஈமானின் முக்கிய ஆதாரம் என்னவென்று சற்றுக் கூர்ந்து நோக்கும் போது, அல்லாஹ்...அல்லாஹ்...அல்லாஹ்... என்று அவனுக்காகவே வாழ்ந்து, அவனுக்காகவே மடிந்து மற்றும் வாழ்ந்து

கொண்டிருக்கின்ற இறைநேசர்களிடம் வைத்துக் கொண்டிருக்கின்ற உள்ளப்பூர்வமான அன்பும்(முஹப்பத்தும்), அவர்களிடத்திலேயே நாம் வெளிப்படுத்தும் பணிவான அடிமைத்தனமுமே ஆகும் என்பது புலனாகிறது. இதற்காகத்தான் திருக்குர்ஆனில், பல இறைநேசர்களின் செயல்களை நமக்கு நினைவூட்டிக் கொண்டிருக்கின்றான் அல்லாஹுதஆலா என்பதும் தெளிவாகிறது!

## தீனின் உயிர்...

எனவே தான், தீனின் உயிரான இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு அவர்களின் செயல்களை நினைவுக் கூர்ந்து பஞ்சா - அலாவா போன்றவைகளை, நம் இறைநேசர்களாகிய முன்னோர்கள் ஏற்படுத்தினார்கள். இந்த உணர்ச்சி மிக்க வைபவங்களால் படிப்பறிவில்லாத பாமரர்களும், மாற்று மதத்தினர்களும் எளிதாக வலுவான ஈமானை பெற்றுக் கொண்டார்கள் என்பது வரலாற்று உண்மையாகும். அதுவும் குறிப்பாக இந்தியா போன்ற பல இன சமய மக்கள் வாழும் நாட்டில், இஸ்லாமியக் கருத்துக்களை மாற்று மதத்தவர்களிடம் எடுத்து வைக்கவும், சிறுபான்மையினராக வாழும் முஸ்லிம் மக்கள் தங்களின் ஒற்றுமையையும், தங்களின் வீரத்தையும் பறைசாற்றிடவும் தக்க தருணமாக பஞ்சா - அலாவா நிகழ்ச்சிகளை பயன்படுத்திக் கொண்டார்கள்.

இதனால் சிறுபான்மையினரான முஸ்லிம்கள் மீது, அடிக்கடி ஏற்படும் தாக்குதல் சம்பவம் குறைந்து! இஸ்லாமியர்களுக்கு பாதுகாப்பு ஏற்பட்டது! சகோதரர்கள் போல் பாவிக்கும் மாற்று சமுதாய மக்களும் பணிவு மரியாதையுடன், இந்த பஞ்சா - அலாவா பண்டிகைகளில் கலந்து கொண்டு அல்லாஹ்ப் பண்டிகை என்று போற்றிப் புகழ்ந்து வருகின்றனர்.

## மன்னர்கள் போற்றிய பஞ்சா...

மன்னர் திப்பு சுல்தான் ரஹ்மதுல்லாஹ் அவர்கள் தமது ஆட்சிக் காலத்தில், யாரெல்லாம் பஞ்சா வைபவத்தை சிறப்பாக தொன்று தொட்டு கொண்டாடி வருகிறார்களோ, அதை தொடர வேண்டும் என்ற கட்டளையை பிறப்பித்துள்ளார்கள். ஷரீஅத் பிரகாரம் வாழ்ந்த மொகலாய மன்னர்- ஹஜ்ரத் அவுரங்கசீப் ரஹ்மதுல்லாஹ் அவர்கள் பஞ்சாவை ஆதரித்துள்ளார்கள் என்பதை ஃபத்வாயே ஆலம்கீரில் காணலாம். பக்தியுடனும், மரியாதையுடனும் தொன்று தொட்டு வரும் இப்புனித பண்டிகை,

இஸ்லாமியர்களின் நலனுக்காக - வலுவான ஈமானுக்காக கொண்டாடப்பட வேண்டியதே! இதில் கலந்துக் கொள்ள விருப்பமில்லாதவர்கள் தாராளமாக ஒதுங்கிக் கொள்ளலாம். அதில் தவறொன்றுமில்லை, மேற்படி கொண்டாடுவதை தடுக்க முயல்வது தேவையில்லாத செயலாகும். (ஹராமியின் செயலாகும் என்பதை புரிந்துக் கொள்ள வேண்டும்) இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு அவர்களின் சத்தியச் செயலை நினைவுபடுத்தும் உச்ச கட்ட உணர்ச்சியான ஈமானின் வெளிப்பாடே பஞ்சா - அலாவா செயல்முறை நிகழ்ச்சிகளாகும்.

**எச்சரிக்கை...**

பக்தியுடனும், ஒழுக்கத்துடனும் பேணும் இப்பண்டிகையில் போதைப்பொருட்களை உபயோகிப்பது, சினிமா பாடல்களை ஒலிக்க செய்வது, ஊராரிடம் பணத்தை வசூல் செய்து ஏமாற்றுவது போன்றவைகள் இஸ்லாத்திற்கு எதிரானது. மேலும் அப்படி செய்கிறவர்களுக்கு, இமாமவர்களின் கோபத்திற்கு ஆளாகி தரித்திரம் பிடிக்கவும் வாய்ப்புள்ளது என்பதை எச்சரிக்கிறோம்!

## முஸ்லிமல்லாத அறிஞர்களின் பார்வையில் இமாம் ஹுஸைன் ரழியல்லாஹு அன்ஹு

"எதிர்ப்புகள் சூழ்ந்து நின்ற போதிலும், வெற்றியை அடைவது எப்படி? என்பதை நான் ஹுஸைன் (ரழியல்லாஹு அன்ஹு) அவர்களிடமிருந்து கற்றுக் கொண்டேன்"

"நான் சொந்தமாக கர்பலா ஹீரோவின் ஜீவிய வரலாற்றை ஆழ்ந்து படித்திருப்பதால், அதையே மக்களுக்கு எடுத்துச் சொல்கிறேன், அது யாதெனில் ஹுஸைனுடைய (ரழியல்லாஹு அன்ஹு) நடத்தை ஒழுக்கத்தை (Conduct) பின்பற்றாமல் வேறு வழியில் நமக்கு மோட்சம் கிடைக்காது"

**- மகாத்மா காந்தி.**

"கர்பலா சம்பவம் மனித நேயத்தன்மையின் வலிமையையும் அதனை தெரிந்து கொள்ளவும் உதவுகிறது. இமாம் ஹுஸைன் (ரழியல்லாஹு அன்ஹு) அவர்களின் தியாகம், எல்லாக் கூட்டத்தருக்காகவும், சமுதாயத்தினருக்காகவும் ஆகும். இது நேரான பாதையில் உள்ள நல்லவர்களின் உதாரணம் ஆகும்"

**- பண்டித் ஜவஹர்லால் நேரு.**

"ஹுஸைன் (ரழியல்லாஹு அன்ஹு) அவர்களின் தியாகம், ஆன்மீகத்தையே வெளிப்படுத்தியது! உண்மையையும் நீதியையும் நிலைநிறுத்துவதற்கு, இராணுவப் படைகள் மற்றும் ஆயுதங்களை காட்டிலும் தியாக வாழ்வே, வெற்றியை தர வல்லது! என்பதையே இமாம் ஹுஸைன் (ரழியல்லாஹு அன்ஹு) அவர்களின் செயல் வெளிப்படுத்தியது"

**- இரபீந்திரநாத் தாகூர்**

"முந்தைய வரலாற்று போர்க்களமும், இன்றைய நவீன உலக போர்க்களமும் மனிதர்களிடையே பெறாத அனுதாபத்தையும், ஈர்ப்பையும் கர்பலா போர்க்களம் பெற்றுள்ளது. மேலும் ஹுஸைன் (ரழியல்லாஹு அன்ஹு) அவர்களின் ஷஹாதத்தைக் காட்டிலும், நிறைய பாடங்களை சிறந்த முறையில் கற்றுக் கொள்ளவும் இச்சம்பவம் உதவுகிறது"

**-லெபானிஸ் எழுத்தாளர்,**
**ஆன்டோய்ன் பரா. (Husayn in Christian Ideology)**

“பல ஆண்டுகளுக்கு முன்னரே இமாம் ஹுஸைன் (ரழியல்லாஹு அன்ஹு) அவர்கள், தனது வாழ்க்கையை கொடுத்து விட்ட போதிலும் அவர்களது அழிவில்லாத ஆன்மா, இன்றளவும் மக்களின் மனதில் ஆட்சியை செலுத்திக் கொண்டிருக்கிறது”

**- டாக்டர் இராதா கிருஷ்ணன்.**

“சரித்திரத்திலேயே கர்பலாவுடைய ஹுஸைனை (ரழியல்லாஹு அன்ஹு) தவிர, மனித குலத்தின் மீது இயற்கைக்கு அப்பாற்பட்ட உள்ளத்தை உயிர்ப்பிக்கும் ஆற்றலை விட்டுச் சென்ற வேறு ஒருவரின் பெயரும் கூட கிடைக்கவில்லை. சத்தியத்திற்கு பணிதலும், அசத்தியத்திற்கு எதிர்த்து வாளேந்துவதும், அறிவும், சகிப்புத்தன்மையும், அன்பும், பாசமும், நல்லதிற்கு தியாகமும், தீயதை எதிர்த்து அர்ப்பணித்தல் போன்ற உயர்ந்த குணங்களும், அவர் மூலம் உலகிற்கு கிடைத்துக் கொண்டிருக்கின்றன!”

**- பிரான்ஸின் பிரபல எழுத்தாளர்,
வால்டர்.**

“அனைத்து சமுதாயத்தினராலும் நினைத்து போற்றக் கூடிய மிகச் சிறந்த மனிதரான ஹுஸைன் (ரழியல்லாஹு அன்ஹு), உங்களிடையே பிறந்ததனால், முஸ்லிம் மக்களே! உங்களுக்கு என் வாழ்த்துக்களை தெரிவித்துக் கொள்கிறேன்”

**- திருமதி கவிக்குயில் சரோஜினி நாயுடு.**

“ஹுஸைன் (ரழியல்லாஹு அன்ஹு) அவர்களின் தியாகத்தாலேயே! இஸ்லாம் இன்னும் உயிருடன் இருக்கிறது! இல்லையென்றால், இந்த உலகில் இஸ்லாம் என்று பெயர் சொல்வதற்கும் கூட யாரும் இருந்திருக்க மாட்டார்கள்!”

**- சுவாமி சங்கராச்சாரியார்,
சர்ஃபராஸ் 1963 - லட்சுமணபுரி.**

“ஹுஸைனும் (ரழியல்லாஹு அன்ஹு) அவருக்கு துணை நின்றவர்களும், இறைவன் மீது திடமான நம்பிக்கை வைத்துள்ளதையே கர்பலா சம்பவம் நமக்கு நல்ல படிப்பினைத் தருகிறது. உண்மை, பொய், என்ற பிரச்சினை எழும் போது எண்ணிக்கை அதிகம் கொண்ட அணி எது என்பது முக்கியமல்ல என்றும், இமாம் ஹுஸைனின் (ரழியல்லாஹு அன்ஹு) வெற்றி,

அவருடைய அணி சிறுபான்மையானதே! என்பதையே என்னை மறக்கடிக்க வைத்து விட்டது, வியப்பானதாகும்!”

**- தாமஸ் கார்லைல்,**
**ஸ்காட்லாந்தின் வரலாற்றாசிரியர் மற்றும் கட்டுரையாளர்.**

## வஞ்சக வஹ்ஹாபிய சாத்தான்கள்...

இப்படி, முஸ்லிமல்லாத பிரபலங்களின் பார்வையில் இமாம் ஹுஸைன் (ரழியல்லாஹு அன்ஹு) அவர்கள் இருக்க, முஸ்லிம்களாகிய நாம், எந்த அளவுக்கு இமாமவர்களை நினைத்து, அவர்களை போற்றி, அவர் தந்த இஸ்லாத்தில் வாழ்ந்து (இஸ்லாத்தின் உயிர் - ஹுஸைன் ரழியல்லாஹு அன்ஹு), ஈருலக வெற்றியை பெற வேண்டும் என்பதை முடிவு செய்து கொள்ளுங்கள். அல்லாஹ்வையும் ரஸுலையும் ஏற்றுக் கொண்டோம், ஆனால் அஹ்லுல் பைத்துகளை ஏற்றுக் கொள்ள மாட்டோம் என்பவர்கள், அல்லாஹ்விற்கு மட்டும் மரியாதை, ஆதமுக்கு (அலைஹிஸலாம்) கிடையாது என்று கூறிய பக்கா (தௌஹீதுவாதி) வஹாபியான சாத்தானின் அணியைச் சார்ந்தவர்களே! என்பது விளங்கும்.

ஏனெனில், அல்லாஹ் தன்னுடைய ரஸுலை ஹபீப் என்று நேசிக்கிறான். மேலும் ரஸுலை நேசிப்பது என்னை நேசிப்பதாகும் என திருக்குர்ஆன் மூலம் கூறுகிறான். ரஸுலல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களோ, ஹுஸைன் என்னில் (ரழியல்லாஹு அன்ஹு) இருக்கிறார் எனக் கூறுகிறார்கள்! அப்படியானால் ஹுஸைனை (ரழியல்லாஹு அன்ஹு) நேசிப்பது, உண்மையில் ரஸுலல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை நேசிப்பதாகும். இமாமவர்களை நினைக்க மறுப்பது உண்மையில் ரஸுலல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை நினைக்க மறுப்பதாகும். அல்லாஹ்வின் ரஸுலை நினைக்க மறுப்பது உண்மையில் அல்லாஹ்வையே மறந்து வாழ்வதாகும். இப்போது புரிகிறதல்லவா? அஹ்லுல் பைத்துகளையும், அவர்களை நேசிக்கும் இறைநேசர்களையும் (அவுலியா அல்லாஹ்), நினைக்க மறுப்பவர்கள்-மறப்பவர்கள் சாத்தானின் ஜமாஅத்தை சேர்ந்தவர்கள் என்பது!

## தேவ்பந்தி தப்லீக் வஹ்ஹாபிகள்...

மொஹரம் பண்டிகையை கொண்டாடக் கூடாது, ஃபாத்திஹா ஓதக் கூடாது, மொஹரம் தப்ருக்கான (பிரசாதமான) கிச்சடா, சர்பத் சாப்பிடுவது ஹராம் என இல்யாஸின் தப்லீக்

ஜமாஅத்தும், தேவ்பந்திய வஹாபிய மதரஸாவை சார்ந்த ஆலிம்களும் கூறித் திரிகின்றனர். தத..நந..ஜஜ..முமு..கக..ப.பி.ம.நே.. என்று அரசியல் கட்சி ஆரம்பித்து விட்டு, யஜீதின் அரசியலை நடத்தும் அதாவது பணப் பெட்டியை அதிகம் கொடுக்கும் கட்சியினருக்கு, தங்களின் ஆதரவு என பக்கத்தாளம் போட்டு பிழப்பை நடத்தி, முஸ்லிம் மக்களின் ஈமானைப் பறிக்கும் கூட்டமும், எப்படியாவது இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு அவர்களின் நினைவை, முஸ்லிம்களை விட்டு தூரமாக்கிட பல முயற்சிகளை செய்து கொண்டிருக்கின்றனர்.

இந்த வஹாபிகளின் தோழரான, பீஸ் டி.வி.யில் தோன்றும் Dr.ஜாகிர் நாயக் (ஜமாத்தே இஸ்லாமி ஹிந்த்), ஒரு படி வஹாபிஸத்தில் முன்னேறி, இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு அரசியல் காரணங்களுக்காகத் தான் கர்பலா போர்க்களம் சென்றார் எனவும், கொடிய யஜீதை! "ரஜியல்லாஹு அன்ஹு" என்று கூறி யஜீது நல்லவர் என ஆதரிப்பதும் இன்றைய முஸ்லிம்களை இவர்கள் எவ்வாறு குழப்பி, நேரான பாதையிலிருந்து தவற வைக்கிறார்கள் என்பதை தெரிந்துக் கொள்ளலாம்.

யஹூதி, நஸ்ரானிகளிடமிருந்து மறைமுக பொருளுதவியை பெற்று, தீனின் வேலை செய்கிறோம் என்று கூறி, முஸ்லிம்களை ஒழிக்க நினைக்கும் இவர்கள் பல்வேறு காலக் கட்டங்களில் பலப்பல பெயர்களை கொண்டு- ஒரே கொள்கை ( வஹாபிஸக் கொள்கை: - ரஸூலல்லாஹ் - அஹ்லுல் பைத்துகள் - அவ்லியா அல்லாஹ் மீது உள்ள ஈமானை நாசம் செய்வது) தாங்கி வந்தவர்களை, உண்மையான முஸ்லிம்களிடமிருந்து வேறுபடுத்தி உலகிற்கு தோலுரித்து காட்டுவதற்காகவும் கூட, கர்பலா சம்பவம் நடந்தேறியது எனில் அதை மறுப்பதற்கில்லை.

## அன்றைய குழப்பவாதிகள் இன்றைய வஹ்ஹாபிகள்...

ஆம், அன்றைய நேரிய கிலாஃபத் ஆட்சியிலிருந்தே, இஸ்லாம் என்ற போர்வையில் ஒழிந்து கொண்டு, நாங்களும் முஸ்லிம்கள் தான் என்று குழப்பங்களையும், சதிகளையும் ஏற்படுத்தியவர்கள், அஹ்லுல் பைத்துகள் மற்றும் இறைநேசர்கள் மீது காழ்ப்புணர்ச்சி கொண்டவர்கள் என அனைவரும் தெள்ளத் தெளிவாக கர்பலா சம்பவத்தின் போதே உலகின் முன் வெளிப்பட்டார்கள். இன்றும் முஸ்லிம்கள் என்ற தோற்றப் பெயரில், வலம் வரும் இந்த வஹாபிகள் கர்பலா சம்பவத்தையும், இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு அவர்களின் நினைவையும்,

நினைக்க தடுப்பதன் காரணம் தங்களின் வஹாபிஸ தோற்றம் வெளிப்பட்டு விடுமோ என்ற பயமே!

இந்த வஹாபிகள், தங்களின் அச்சத்தை நேரடியாக வெளிப்படுத்தாமல், ஐவேளைத் தொழுகை, திருக்குர்ஆன் ஓதுதல், தஸ்பீஹ், பெரிய பெரிய ஜிப்பா, நெற்றியில் கருப்பு பட்டை போன்ற தங்களின் வழக்கமான பாவனையுடன் மொஹரம் பண்டிகையா...? கிச்சடாவா...? சர்பத்தா...? இமாம் ஹ¯ஸைன் ரஜியல்லாஹ¯ அன்ஹ¯வின் நினைவா...? எல்லாம் **ஷிர்க்! பித்அத்! கூடவே கூடாது!** என மேடைகளிலும், மஸ்ஜிதுகளிலும் புலம்புகின்றனர்.

ஆக புலம்புகிறவர்களையும், இமாம் ஹ¯ஸைன் ரஜியல்லாஹ¯ அன்ஹ¯வை நினைக்க மறுப்பவர்களையும், யஜீது நல்லவன் எனக் கூறுகிறவர்களையும், அல்லாஹ¯தஆலா! மறுமை நாளில், யஜீதின் நரகவாதிகள் அணியில் சேர்த்திடுவான்!

மாறாக, இமாம் ஹ¯ஸைன் ரஜியல்லாஹ¯ அன்ஹ¯ அவர்களை நினைப்பவர்களையும், நாங்கள் ஹ¯ஸைனிதான் என்ற உணர்வோடு வாழ்கிறவர்களையும், அல்லாஹ¯தஆலா! மறுமை நாளில், கர்பலா களத்தில் வெற்றிப் பெற்ற, சொர்க்கத்தின் நாயகரான இமாம் ஹ¯ஸைன் ரஜியல்லாஹ¯ அன்ஹ¯ அவர்களின் அணியில் சேர்த்திடுவானாக! - ஆமீன்.

اسلام زندہ ہوتا ہے ہر کربلا کے بعد

**ஒவ்வொரு கர்பலாவிற்கு பின்பும், இஸ்லாம் உயிர்த்தெழுகிறது!**

***யா அலீ! தூலா! ஹஸன்! ஹ¯ஸைன்!***

# மறக்க முடியாத 72 கர்பலா தியாகிகளின் திருநாமங்கள்...!

1. ஹழ்ரத் இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு இப்னே ஹழ்ரத் அலி கர்ரமல்லாஹு வஜ்ஹஹு.
2. ஷஹ்ஜாதயே அலி அக்பர் இப்னே ஹழ்ரத் இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு.
3. ஹழ்ரத் ஜாஃபர் இப்னே ஹழ்ரத் இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு.
4. ஷஹ்ஜாதயே அலி அஸ்கர் இப்னே ஹழ்ரத் இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு.
5. ஹழ்ரத் காஸிம் இப்னே ஹழ்ரத் இமாம் ஹஸன் ரஜியல்லாஹு அன்ஹு.
6. ஷஹ்ஜாதயே அவ்ன் இப்னே ஹழ்ரத் அப்துல்லாஹ் & பீபி ஜைனப் ரலியல்லாஹு அன்ஹுமா.
7. ஷஹ்ஜாதயே முஹம்மத் இப்னே ஹழ்ரத் அப்துல்லாஹ் & பீபி ஜைனப் ரலியல்லாஹு அன்ஹுமா.
8. ஹழ்ரத் அப்பாஸ் இப்னே ஹழ்ரத் அலி கர்ரமல்லாஹு வஜ்ஹஹு
9. ஹழ்ரத் ஜாஃபர் பின் ஹழ்ரத் அலி கர்ரமல்லாஹு வஜ்ஹஹு.
10. ஹழ்ரத் உஸ்மான் பின் ஹழ்ரத் அலி கர்ரமல்லாஹு வஜ்ஹஹு.
11. ஹழ்ரத் அப்துல்லாஹ் பின் ஹழ்ரத் அலி கர்ரமல்லாஹு வஜ்ஹஹு
12. ஹழ்ரத் ஜஹீர் பின் அல்கைன் ரஜியல்லாஹு அன்ஹு.
13. ஹழ்ரத் ஹுர் பின் யஜீத் ரியாஹி ரஜியல்லாஹு அன்ஹு.
14. ஹழ்ரத் ஹபீப் பின் மஜாஹிர் ரஜியல்லாஹு அன்ஹு.
15. ஹழ்ரத் முஸ்லிம் பின் அவ்ஸஜா ரஜியல்லாஹு அன்ஹு.
16. ஹழ்ரத் நஃபா பின் ஹிலால் ஜமலி ரஜியல்லாஹு அன்ஹு.
17. ஹழ்ரத் தஹுப் பின் அப்துல்லாஹ் ரஜியல்லாஹு அன்ஹு.
18. ஹழ்ரத் அபிஸ் பின் அபீ ஷஹ்பீப் ஷக்ரீ ரஜியல்லாஹு அன்ஹு.
19. ஹழ்ரத் ஜஉன் பின் ஹுமி ரஜியல்லாஹு அன்ஹு.
20. ஹழ்ரத் அஸ்லம் பின் அம்ரு ரஜியல்லாஹு அன்ஹு.
21. ஹழ்ரத் அம்ரு பின் காலித் அஜ்தி சைதாவி ரஜியல்லாஹு அன்ஹு.
22. ஹழ்ரத் அப்துர் ரஹ்மான் பின் அகீல் ரஜியல்லாஹு அன்ஹு.
23. ஹழ்ரத் ஜாஃபர் பின் அகீல் ரஜியல்லாஹு அன்ஹு.
24. ஹழ்ரத் அப்துல்லாஹ் பின் அம்ரு ரஜியல்லாஹு அன்ஹு.
25. ஹழ்ரத் முஹம்மத் பின் அபீ ஸயீத் ரஜியல்லாஹு அன்ஹு.

# பொருளடக்கம்



26. ஹஜ்ரத் நயீம் பின் அஜ்லான் ரஜியல்லாஹு அன்ஹு.
27. ஹஜ்ரத் அம்ரு பின் கஅப் ரஜியல்லாஹு அன்ஹு.
28. ஹஜ்ரத் காஸித் பின் ஜஹீர் ரஜியல்லாஹு அன்ஹு.
29. ஹஜ்ரத் கனானா பின் அதீக் ரஜியல்லாஹு அன்ஹு.
30. ஹஜ்ரத் அம்ரு பின் மஷீயா ரஜியல்லாஹு அன்ஹு.
31. ஹஜ்ரத் ஜர்கம் பின் மாலிக் ரஜியல்லாஹு அன்ஹு.
32. ஹஜ்ரத் ஆமிர் பின் முஸ்லிம் ரஜியல்லாஹு அன்ஹு.
33. ஹஜ்ரத் சைஃப் பின் மாலிக் ரஜியல்லாஹு அன்ஹு.
34. ஹஜ்ரத் அப்துர் ரஹ்மான் பின் மாலிக் ரஜியல்லாஹு அன்ஹு.
35. ஹஜ்ரத் ஹபப் பின் ஹாரிஸ் ரஜியல்லாஹு அன்ஹு.
36. ஹஜ்ரத் அம்ரு பின் அல்ஜுனைதி ரஜியல்லாஹு அன்ஹு.
37. ஹஜ்ரத் ஹலஸி பின் அம்ரு ரஜியல்லாஹு அன்ஹு.
38. ஹஜ்ரத் ஸவ்ர் பின் அம்மார் ரஜியல்லாஹு அன்ஹு.
39. ஹஜ்ரத் அம்மார் பின் அபீ ஸலமா ரஜியல்லாஹு அன்ஹு.
40. ஹஜ்ரத் நௌமான் பின் உமர் ரஜியல்லாஹு அன்ஹு.
41. ஹஜ்ரத் ஜஹீர் பின் அம்ரு ரஜியல்லாஹு அன்ஹு.
42. ஹஜ்ரத் ஜபலா பின் அலீ ரஜியல்லாஹு அன்ஹு.
43. ஹஜ்ரத் மஸ்ஊத் பின் ஹஜ்ஜாஜ் ரஜியல்லாஹு அன்ஹு.
44. ஹஜ்ரத் அப்துல்லாஹ் பின் உர்வா கஃப்பாரி ரஜியல்லாஹு அன்ஹு.
45. ஹஜ்ரத் ஜஹீர் பின் பஷீர் ரஜியல்லாஹு அன்ஹு.
46. ஹஜ்ரத் அம்மார் பின் ஹஸன் ரஜியல்லாஹு அன்ஹு.
47. ஹஜ்ரத் அப்துல்லாஹ் பின் அமீர் ரஜியல்லாஹு அன்ஹு.
48. ஹஜ்ரத் முஸ்லிம் பின் கஸீர் ரஜியல்லாஹு அன்ஹு.
49. ஹஜ்ரத் ஜஹீர் பின் சலீம் ரஜியல்லாஹு அன்ஹு.
50. ஹஜ்ரத் அப்துல்லாஹ்-உபைதுல்லாஹ் பின் ஜயீத் ரஜியல்லாஹு அன்ஹு.
51. ஹஜ்ரத் பினத் பின் ஹாரிஸ் ரஜியல்லாஹு அன்ஹு.
52. ஹஜ்ரத் மின்ஹாஜ் பின் சுஹைம் ரஜியல்லாஹு அன்ஹு.
53. ஹஜ்ரத் சஜ்ஜாத் பின் ஹாரிஸ் ரஜியல்லாஹு அன்ஹு.
54. ஹஜ்ரத் சயீத் பின் அப்துல்லாஹ் ஹனஃபி ரஜியல்லாஹு அன்ஹு.
55. ஹஜ்ரத் ஜாஃபர் பின் அபூதாலிப் ரஜியல்லாஹு அன்ஹு.
56. ஹஜ்ரத் அப்துல்லாஹ் பின் அபூதாலிப் ரஜியல்லாஹு அன்ஹு.
57. ஹஜ்ரத் அப்துல்லாஹ் பின் குத்பா ரஜியல்லாஹு அன்ஹு.
58. ஹஜ்ரத் அம்மார் பின் ஹஸன் ரஜியல்லாஹு அன்ஹு.
59. ஹஜ்ரத் ஸாஸா பின் அம்ரு ரஜியல்லாஹு அன்ஹு.
60. ஹஜ்ரத் முஹம்மத் அபீ ஸயீத் பின் அகீல் ரஜியல்லாஹு அன்ஹு.

**மற்றும்...**

61,62, ஹஜ்ரத் இமாம் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஜஹு அவர்களின் 2 அடிமைகள்.

63-72 ஹஜ்ரத் இமாம் ஹுஸைன் ரஜியல்லாஹு அன்ஹு அவர்களின் 10 அடிமைகள்

**குறிப்பு :**

முஹர்ரம் பிறை 10, ஆஷுரா தினத்தன்று ஷர்பத், கிச்சடா செய்து இந்த 72 கர்பலா களத்தின் தியாகிகளின் பேரில் ஃபாத்திஹா ஓதுவது அஹ்லே சுன்னத் வல் ஜமாஅத் உலமாக்கள் மற்றும் பொது மக்கள் வாழையடி வாழையாக செய்து வரும் ஆகுமான நற்செயல் ஆகும்.

## இப்புத்தக தொகுப்பிற்கு உதவிய ஆதார நூல்கள்...

## (References)

1) பஞ்சே கன்ஜே இர்ஃபான் (உருது)
ஆசிரியர்: - ஹஜ்ரத் கலீம் அஜார்வி ரஹ்மத்துல்லாஹி அலைஹி

2) நபிப்பேரர் சின்னத்தில் விளையும் நற்பலன்கள்
ஆசிரியர்: - சாஹெப் வலியுல்லாஹ் ரஹ்மத்துல்லாஹி அலைஹி

3) தியாகிகளின் வேந்தர்கள் இமாம் ஹஸன், இமாம் ஹுஸைன்
ஆசிரியர்: - ஜனாப். எஸ்.எஸ். அலீ

4) மாபெரும் ஞானி நாகூர் யூசுப் தாதா
ஆசிரியர்: - ஜனாப். எஸ்.எஸ். அலீ

5) தஞ்சை தர்காக்களும், கர்பலா சின்னங்களும்
சாஹெப் வெளியீட்டகம்

6) நாயகத்தின் நான்கு கலீஃபாக்கள்
ஆசிரியர்: - ஜனாப். எம்.எஸ். முஹம்மது தம்பி

7) Naqshbandhi Haqqani's History of Karbala taken from www.ummah.net/Al_adaab

8) Imam Husayn - wikipedia - Encyclopedia

9) www.aulia-e-hind.com

10) www.google.com (Search : Non muslim views on Imam Hussain, Yazid in the view of Ahlul Sunnah Historians)

## ஹை ஆஜ் பிர் ஜஹான் கு ஜரூரத் ஹுஸைன்கி

பேஷே குதா ஹை கித்னி ஃபஜீலத் ஹுஸைன்கி
பூசேஹ் கோயி ரஸூல்சே அஜ்மத் ஹுஸைன்கி
ஜின்கு மிலி ஹை தௌலதே இர்ஃபானோ ஆகஹி
ஓஹ் லோக் ஜான்தே ஹைன் ஹகீகத் ஹுஸைன்கி
பாயேகா ஓஹ் அமான் ந தஹே தாமனே ரஸூல்
தில்மே நஹி ஹை ஜிஸ்கே முஹப்பத் ஹுஸைன்கி
இஸ்லாம் கி பகாகேலியே ஸர்கடாதியா
ஹைகிஸ் கதர் அஜீம் ஷஹாதத் ஹுஸைன்கி
பிர் ஸர் உடாஹ் ரஹே ஹைன் யஜீதானே ரோஸ்கார்
ஹை ஆஜ் பிர்ஜஹான் கு ஜரூரத் ஹுஹைன்கி
ஸாயேமே தேக்கே பிஹ் அதாகி நமஜே இஸ்க்
மிராஜே பந்தகி ஹை இபாதத் ஹுஸைன்கி
யேக் தர்ஸே ஜிந்தகி ஹை ஜஹான் கேலியே அசர்!
அஜ்மோ ஸபாதோ ஹிம்மதோ ஜுர்ரத் ஹுஸைன்கி!!

(அசர் ஜீவன் பூரி)

நூலின் பெயர் : பன்ஞ் கன்ஞ்சே இர்ஃபான்.

# ہے آج پھر جہاں کو ضرورت حسین کی

پیشِ خدا ہے کتنی فضیلت حسین کی — پوچھے کوئی رسول سے عظمت حسین کی
جنکو ملی ہے دولتِ عرفان و آگہی — وہ لوگ جانتے ہیں حقیقت حسین کی
پائے گا وہ اماں نہ تہہِ دامنِ رسول — دل میں نہیں ہے جس کے محبّت حسین کی
اسلام کی بقا کے لئے سر کٹا دیا — ہے کس قدر عظیم شہادت حسین کی
پھر سر اٹھا رہے ہیں یزیدانِ روزگار — ہے آج پھر جہاں کو ضرورت حسین کی
سائے میں تیغ کے بھی ادا کی نمازِ عشق — معراجِ بندگی ہی عبادت حسین کی
لختِ دلِ علی ہیں تو ہیں جانِ فاطمہ — پھر کیوں نہ دو جہاں میں ہو شہرت حسین کی

اک درسِ زندگی ہے جہاں کے لئے آثر !
عزم و ثبات و ہمت و جرأت حسین کی !!

(آثر جونپوری)

نام کتاب: پنج گنج عرفان

# தர்கா

படிக்க...! Rni.No. TNTAM/2009/30120 பாதுகாக்க...!!

ISHQ-E-RASOOL ﷺ IS THE SOUL OF IMAN.
ரஸூலுல்லாஹ்வை நேசிப்பது ஈமானின் உயிர்.
நாட்டை நேசிப்பது ஈமானின் அங்கம்

உருஸ் 1 இதழ் துவக்கம் தனிப்பிரதி : ரூ. 5/-
இதழ் 1 ஹிஜ்ரி – 1429 மே – 2007 சந்தா : ரூ. 50/

*நாரயே தக்பீர்! நாரயே ரிஸாலத்! நாரயே விலாயத்!*
*அல்லாஹு அக்பர்!! யா ரஸூலல்லாஹ்!! யா முஹ்யித்தீன்!!*

## எங்களது இதழின் சிறு அறிமுகமாக...!

வஹ்ஹாபிகள் பல ரூபங்களில், பெரும் பொருளாதாரத்தின் துணை கொண்டு, ஊடகங்களின் வாயிலாக மக்களை குழப்புகின்ற இக்காலத்தில், நம் முன்னோர்கள் மூதாதையர்கள் வழியில் அல்லாஹ், ரஸூல், பஞ்சதனே பாக், சஹாபாக்கள், கௌஸ் நாயகம், அவுலியாக்கள், இமாம்கள், ஷரீஅத், தரீகத்துக்கு உட்பட்டு செய்து வந்த ஐம்பெரும் கடமைகள், பாங்கு, தராவீஹ், மீலாது, மௌலூது, ஜியாரத், கொடியேற்றம், உருஸ், சந்தூரி, தர்காக்கள், தைக்கால்கள், பாத்திஹாகள் என்ற நல் அமல்களை எல்லாம் ஷிர்க் என்றும் பித்அத் என்றும் தேவ்பந்தி தப்லீகி, தவ்ஹீதி சலஃபி, மௌதூதி, நத்வி போன்ற இன்னும் பல இஸ்லாமிய பெயர் தாங்கிய வஹ்ஹாபிய ஜமாஅத்துக்கள் செய்யும் குழப்பங்களுக்கு நம் சுன்னத் ஜமாஅத் பாமர முஸ்லிம்கள் பலியாகிவிடாது 1400 ஆண்டுகளாக நாம் செய்யும் அனைத்து காரியங்களும் ஷரீஅத்துக்கு உட்பட்ட நற்காரியங்களே என்று எடுத்துக் கூறுவதற்கான சிறு முயற்சியாக துவங்கப்பட்டது தான் இந்த **தர்கா** இதழ்.

ஆகவே தீனிலும், துன்யாவிலும் தர்கா வலிமார்கள் பாதையில் சுன்னத் வல் ஜமாஅத் கொள்கைகளை கடைபிடித்து அரசியல், ஆன்மிகம், வரலாறு என பல்சுவை கலவையாய் சூஃபியாக்களின் வழியில் மதநல்லிணக்கத்தைப் பேணி தொண்டாற்றிட வந்துள்ள **தர்கா** இதழை படித்துப் பாருங்களேன்!!!

பொருளடக்கம்

பிஸ்மில்லாஹ்ஹிர்ரஹ்மானிர்ரஹீம்

நஹ்மதுஹு வநுஸல்லி அலா ரசூலிஹில் கரீம்

DEMOCRACY IS THE PRINCIPLE OF IMAM HUSSAIN

(யா அலி!! தூலா!!

ஹஸன்!! ஹுஸைன்!!)

# ஒரு மாவீரரின் சத்தியப்போராட்டம்

# "கர்பலா"

ஸுஜூதில் தன் தலையை கொடுத்து, தொழுகை என்பது என்ன? என்று புரிய வைத்த இமாம் ஹுஸைனின் (ரழியல்லாஹு அன்ஹு) மீது லட்சாதி லட்சங்கள் சலாம்.

கர்பலா உந்தன் விதியின் மீது லட்சாதி லட்சங்கள் சலாம்.

-சய்யதினா ஆலா ஹஜ்ரத் ரஹிமஹுல்லாஹ் -

பரேல்வி ஷரீஃப்